# போலீஸ் வன்முறை

## நக்சல்பாரியில் மத்திய அரசின் தூண்டுதலில்

## நடக்கின்ற அட்டூழியங்கள்!


# தீக்கதிர்

கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) வார ஏடு

கதிர் 4 ] 30--7--67 20 காசுகள் மலர் 45


### இந்தியன் எக்ஸ்பிரஸ் நிருபர் தரும் விபரங்கள்!

நக்சல்பாரி விவசாயிகள் போராட்டத்தை நசுக்க மேற்குவங்க போலீஸ் படை சவான்-அஜாய்முகர்ஜி தூண்டுதல் பேரில் ஏவி விடப்பட்டுள்ளது. விவசாயி மக்களை போலீஸ் நரவேட்டையாடும்போது காட்டுராஜா தர்பார் நடத்தும் ஒரு நிலச்சுவான்தார் கூடக் கைது செய்யப்படவில்லை. மத்திய உள்துறை அமைச்சர் சவான் மேற்குவங்க முதலமைச்சர் அஜாய்முகர்ஜியைகலந்தே இந்தச் சதியை வகுத்துள்ளார் என்று கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) குற்றம் சாட்டியுள்ளது. அங்கு நடக்கும் போலீஸ் கொடுமைகளைப் பற்றி கம்யூனிஸ்டுக் கட்சி மீது கொஞ்சமும் அனுதாபம் காட்டவிரும்பாத கொயங்காவின் "இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகையிலேயே வெளியாகியுள்ள உண்மைகளை அப்படியே கீழே தருகிறோம்:-

"நக்சல்பாரி விவசாயிகள் கிளர்ச்சி எப்போதும் ஒரு பெரிய பிரச்னையாக இருக்கவில்லை. அதைக் கையளும் முறைதான் பிரச்னையாக இருந்துள்ளது," என்று "இந்தியன் எக்ஸ்பிரஸ்" விசேஷ நிருபர் திரு நந்தன் ககல் அந்தக் கட்டுரையில் எழுதுகிறார்.

நக்சல்பாரி பகுதிக்கு திரு. நந்தன் ககல் என்ற அந்த நிருபர் விஜயம் செய்த பின்னர் ஜூலை 25-ம் தேதி "இந்தியன் எக்ஸ்பிரஸ்" இதழில் இக்கட்டுரையை தீட்டியுள்ளார். நக்சல்பாரி பகுதியில் தான் தாராளமாக நடமாட முடிந்தது என்றும் அந்தக் கிளர்ச்சித் தலைவர் கனுசன்யாலின் கோட்டை என்று கூறப்படும் புராகஞ்சுக்குக் கூடச்செல்ல முடிந்தது என்றும் அக்கட்டுரையில் அவர் கூறியுள்ளார்.

அவர் மேலும் கூறியிருப்பதாவது:—

"நக்சல்பாரிகிளர்ச்சிவெறும் பத்திரிகைப் புலியே.

மழை காலம் தொடங்கு முன் நடவடிக்கை எடுத்திருந்தால் 300 போலீஸ்காரர்களே அந்தக் கிளர்ச்சியை அடக்கியிருக்க முடியும். 60மைல்பரப்பில் நடைபெறும் அந்தக் கிளர்ச்சி தற்போதைக்கோ இனியோ தேசப்பாதுகாப்புக்கு ஆபத்து என்று கூற முடியாது.

கிழக்குப் பாகிஸ்தானிலிருந்தோ, நேப்பாளத்திலிருந்தோ அல்லது சீனத்திலிருந்தோ ஆயுதங்கள் வந்ததாகக் கூறுவதற்கு ஆதாரமே இல்லை என்று ஸ்தலத்திலுள்ள உயர்தரப் போலீஸ் அதிகாரிகளே கூறுகின்றனர். ஆயுதம் ஏந்திப் போராட கிளர்ச்சிக்காரர்கள் நினைத்திருந்தால் ரயில்பாதையைத் துண்டித் திருப்பார்கள். அவ்வாறு செய்யவில்லை.

கிளர்ச்சிக்காரர்களால் ஆபத்து என்பதெல்லாம் மிகைப்படுத்தப்பட்ட வர்ணனையே. நாடு முழுதும் பத்திரிகைகளில் விளம்பரம் பெறுவதற்கு ஆசைப்பட்டே அதிகாரிகள் இந்தப் புரளியைக் கட்டிவிட்டுள்ளனர். இத ஆசையினால் அதிகாரிகளின் அறிக்கைகளில் உண்மை பலியாகியுள்ளது. பத்திரிகைகள் மூலம் இந்தப் புரளிகளைப் பரப்பியிருப்பதற்கு நியாயம் கிடையாது.

ஜூலை 13-ம் தேதி நடந்த நிகழ்ச்சியைப் பற்றி அதிகாரிகள் விடுத்துள்ள அறிக்கை வேண்டுமென்றே திரித்துக் கூறப்பட்டது என்று ஸ்தலத்தில் விசாரித்த பின் தெரிய வருகிறது,

அன்று என்ன நடந்தது? கனுசன்யால், கடம் மாலிக், ஜொக்கன் மஜூம்தார் ஆகியோர் தலைமையில் 2500 பேர் வில், அம்புகளையும், ஈட்டிகளையும், துப்பாக்கிகளையும் ஏந்தி ராமட்டிஜோட் போலீஸ் நிலையத்தை தாக்கியதாக அதிகாரிகள் வர்ணிக்கின்றனர். இந்தச் சண்டையில் கிளர்ச்சிக்காரர் ஒருவர் துப்பாக்கிச் சனியனால் குத்தி கொல்லப்பட்டதாகவும் 290 பேர் பிடிபட்டதாகவும் மூன்று தலைவர்கள் உட்பட எஞ்சியவர்கள் தப்பி ஓடிவிட்டதாகவும் அதிகாரிகள் கூறுகின்றனர்.

ஒரு போலீஸ்காரரை ஈட்டியால் குத்திக்கொல்ல முனைந்ததால்தான் அவ்வாறு முயற்சி செய்தகிளர்ச்சிக்கார் ஒருவரை துப்பாக்கிச் சனியனால் குத்திக்கொல்ல நேர்ந்தது என்று அதிகாரிகள் தரப்பில் கூறப்படுகிறது.

ஆனால் இந்த வர்ணனை மற்றொரு சமயம் போலீஸ் அதிகாரிகளே தற்செயலாக கூட்டத்தில் ஒரு பத்திரிகையாளரும் இருப்பதை அறியாமல் தெரிவித்த விவரத்துக்குமாறாக உள்ளது.

கனுசன்யால் ஆயுதமேந்திய 2500 பேரைத் திரட்டியிருக்க முடியுமானால் அதைப்போன்ற வேறெந்தச் செயலும் அவரை மகிழ்ச்சியடையச் செய்திருக்காது. 80 கெஜ தூரத்தில்கூட ஒரு ஆதிவாசியின் கையிலுள்ள வில்லும் அம்பும் ஆபத்தான ஆயுதங்களாகும், உண்மையில் 2500 பேர் படையெடுத்து வந்திருந்தால் ஜூலை 13—ம் தேதி சம்பவத்தில் இரண்டு போலீஸ்காரர்கள் மட்டுமே காயமடைந்திருக்க மாட்டார்கள்.

**உண்மையில் நடந்தது என்ன?**

டுவியாஜோட் என்ற இடத்தில் கனுசன்யால் ஒரு பெரிய கூட்டம் நடத்துவதாக போலீசுக்குத் தகவல் எட்டியது அதைக் கலைப்பதற்காக 600 போலீஸ்காரர்கள் நான்கு பிரிவுகளாக அனுப்பப்பட்டனர். போலீஸ் வருவதற்கு முன்பே கூட்டம் கலைந்துவிட்டது. என்றாலும் கூட்டத்துக்கு வந்திருந்தவர்களில் பலரை போலீஸ் கோஷ்டி திடீரெனச் சந்திக்க முடிந்தது. அவர்கள் போலீசுக்கு எதிர்ப்புக் காட்டவில்லை. போலீசாரிடம் ரேடியோ சாதனம் இல்லாததால் பல விவசாயிகள் தப்ப முடிந்தது. இந்தச்சமயத்தில் யாரும் துப்பாக்கிச் சனியனால் குத்திக் கொல்லப்பட்டதாகத் தெரியவில்லை.

துப்பாக்கிச் சனியனால் குத்திக்கொல்லப்பட்ட சம்பவம் குறித்து நக்சல்பாரி இயக்கத்தைச் சார்ந்தசாருமஜூம்தார் கூறுவது நம்பத்தகுந்ததாக இருக்கிறது. சிலிகுரியிலுள்ள சாருபாபுஎன்றஇடத்திலிருந்து நக்சல்பாரி மறைவிடங்களிலுள்ள தலைவர்களுக்கு செய்தி கொண்டு சென்ற நபர் போலீசாரிடம் பிடிபட்டு விசாரணை நடைபெற்ற சமயத்தில் ஒரு போலீஸ்காரரால் துப்பாக்கிச் சனியனால் குத்திக் கொல்லப்பட்டதாக சாருமஜூம்தார் கூறுகிறார்.

குத்துண்டவர் உடலில் ஒரே ஒரு குத்துக்காயம்தான் இருப்பது போலீசாரிடம் [illegible]கம் இல்லாததைக் காட்டுவதாக போலீஸ் தரப்பில் கூறப்படுகிறது. ஆனால் இருகாயங்கள் இருந்திருக்குமானால் சந்தேகத்துக்கு இடமிருந்திருக்காது. ஏனெனில் துப்பாக்கிச் சனியனை உபயோகிக்கும்போது அதைக் கொண்டு குத்தி எடுத்து மீண்டும் குத்த வேண்டும் என்பது போலீசார் கையாளும் விதி முறையாகும். மேலும், கைக்கு எட்டிய தூரத்தில் ஈட்டி ஏந்தி நிற்பவரைத் துப்பாக்கியைக் கொண்டு சுடவேயாகும்

(4-ம் பக்கம் பார்க்க)

### மதுரையில் ஈ.எம் எஸ்சுக்கு வற்வேற்பு!



கேரள முதலமைச்சர் தோழர் நம்பூதிரிபாட் மதுரை நகருக்கும் திண்டுக்கல்லுக்கும் வந்தபோது ரூ 1 லட்ச நிதிக்காக நம் கட்சி வசூலித்துவரும் நிதியை முதல் தடவையாக அவரிடம் அளித்தார்கள். மதுரையில் தோழர் வி. கார்மேகம் தோழர் ஈ.எம்.எஸ்.சிடம் ரூ. 13 ஆயிரம் நிதி வழங்குகிறார்.

போட்டோ
—டி ஜி. ராமகிருஷ்ணன், திருச்சி.




## காவேரி மில் கதவடைப்பு

6—7—67 முதல் புதுக்கோட்டைக் கருகில் காவேரி நகரில் உள்ள "காவேரி நூற்பாலை" மீண்டும் மூடிக்கிடக்கிறது. இந்தக் கதவடைப்புக்கு முதலாளிகளே காரணம். கடந்த பல மாதங்களாகவே தொழிலாளிகளுக்கு சம்பளம் சரியாய்க் கொடுக்காமல் தொழிலாளர் பணத்தையும் துர்வினியோகம் செய்து இப்போது கதவடைப்பினுல் 1500 தொழிலாளர்களையும் அவர்களது குடும்பங்களையும் நடுத் தெருவில் நிறுத்தியிருக்கின்றனர் இந்த முதலாளிகள். தட்டிக் கேட்க ஆளில்லையென்ற திமிருடன் சும்மா இருக்கின்றனர்.

புதுக்கோட்டைப் பிரதேசம் தொழில் வளர்ச்சியில் பின் தங்கிய பகுதியென்று அதிகார பூர்வமாய் அண்மையில் அரசினரால் அறிவிக்கப்பட்டது. அப்படிப்பட்ட இடத்தில் நவீன யந்திரங்கள் உள்ள ஒரு நூற்பாலை மூடிக்கிடப்பதென்றல் அரசாங்கம் உடனே தலையிட்டுத் தீர்க்கவேண்டிய பிரச்சினை என்பது தெளிவு.

இந்த ஆலையின் முதலாளிகளுக்குள்ள சண்டை சச்சரவுகளும், லாபவேட்டையும், தொழிலாளர் பணத்தை மோசடிகள் செய்து விரயம் செய்யும் போக்குமே இந்தத்தொழில் ஸ்தம்பித்துள்ளதற்கு முக்கிய காரணம். பிராவிடெண்ட் பண்டு நிதிக்காகத் தொழிலாளிகள் கொடுத்த பணம் உரிய இடத்தில் கட்டப்படாமல் நிர்வாகத்தால் விழுங்கப்பட்டு விட்டது. கூட்டுறவு பண்டகசாலை சாமான்களுக்குத் தொழிலாளர்கள் சம்பளத்திலிருந்த பிடித்த பணமும், பண்டகசாலைக்குக் கொடுக்கப்படாமல், மேலும் எந்தப் பொருளும் வாங்க முடியாமல் பண்டகசாலை பயனற்று நிற்கிறது. அரிசி வாங்கக்கூடப் பணமில்லை. தொழிலாளர்கள் திண்டாடுகின்றனர். தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் நிதிக்குக் கட்டவேண்டிய தொகையையும் முதலாளிகள் கட்டவில்லை. மின்சாரக் கட்டணமும் செலுத்தாததால் மின்சார இணைப்பு துண்டிக்கப்பட்டு தொழிலாளர் வீடுகளில் இருள் சூழ்ந்து இருக்கிறது.

இந்த முதலாளிகளில்—இவ்வளவு அநீதிக்கும் முக்கியமாகப் பொறுப்பேற்க வேண்டியவர்கள் மானேஜிங் டைரக்டர்களாக இருக்கும் திரு.சூரியநாராயணவும் (சென்னையில் வசிக்கும் முதலாளி) திரு. கன்னியப்ப முதலியாரும் (புதுவை பாரதிமில்லைக் கதவடைப்புச் செய்த புண்ணியவான்)-என்றறிகிறோம். இவர்களுக்குள்ளேயும் தீராச் சண்டை. குரங்குகையில் பூமாலையைக் கொடுத்ததுபோல் இவர்கள் கையில் சிக்கிய ஒரு நல்ல ஆலை—இவர்கள் கொள்ளையடிக்க முடிந்தவரை இவர்களால் நன்கு உபயோகப்படுத்திக் கொள்ளப்பட்டு—இன்று நிர்தாட்சணியமாக இவர்களால் மூடப்பட்டு 150 தொழிலாளர்களை வாழ்விழக்கச் செய்திருக்கிறது.

பம்பாயில் "நியூகெய்சரி ஹிந்த் ஸ்பின்னிங்-வீவிங் மில்" முதலாளியான துவாரகா பிரசாத் ஜலான் என்பவர் சுமார் 5 லட்சம் ரூபாய் பிராவிடெண்ட் பண்டு நிதியை சட்டப்படி ஸ்டேட் பாங்கில் கட்டாது உபயோகப்படுத்திக் கொண்டதால் மோசடிக் குற்றம் சாட்டப்பட்டு போலீசாரால் கைது செய்யப்பட்டு கோர்ட்டில் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டிருக்கிறார்.

இந்தக் காவேரி நகர் மில் முதலாளிகளையும் கைது செய்து அவர்கள் சொத்திலிருந்து நஷ்ட ஈடு கொடுக்கச் சொல்லி, தண்டனை வழங்கவேண்டுமென்று தொழிலாளிகள் வற்புறுத்துவதில் ஆச்சரியமில்லை. நமது மாநிலத்தில் இதுமாதிரி நடந்து கொள்ளும் இன்று எத்தனை எத்தனையோ முதலாளிகளுக்கு இந்த மரியாதை வழங்கப்பட்டால்தான் மாநிலத்தில் தொழிலையும் தொழிலாளர் நலனையும் பாதுகாக்க முடியுமென்ற நிலைதான் நாளுக்கு நாள் தெளிவாகி வருகிறது. தயவுதாட்சணியமின்றி அரசாங்கம் இந்த முதலாளிகள் மேல் நடவடிக்கை எடுக்கவேண்டும். அண்மையில் பஞ்சாலை நெருக்கடி குறித்து ஆராய்ந்து ஆலோசனை கூறிய திலோகநாதன் கமிட்டிசிபாரிசுப்படி சர்க்கார் உத்தரவாதத்துடன் பாங்குகள் கடன் உதவி செய்து மீண்டும் மில்லை ஓட்ட வேண்டுமென்று கூறியுள்ள மில்களில் காவேரி மில்லும் ஒன்று என்று அறிகிறோம்.

காவேரி மில் கதவடைப்பு இனியும் நீடிக்க எக்காரணமும் கிடையாது இதுவரை நிர்வகித்த மேற்குறிப்பிட்ட இரு முதலாளிகளிடமும் மீண்டும் மில்லை ஒப்படைத்தாலும் அவர்கள் சரியாக நடந்து கொள்வார்களென்று நம்பவே முடியாது. அவர்களில் யாருக்குச் கடனைக்கொடுத்து மில்லை ஓட்டுவது என்ற பிரச்சினையையும் கிளப்பிக் காலங்கடத்துவார்கள். எனவே—மாநில சர்க்காரே உடனே இந்த மில்லை ஏற்று நடத்த முன்வர வேண்டுமென்று பலமக வற்புறுத்துகிறோம். இதற்குத் தொழிலாளர்கள் முழுமனதுடன் ஆதரவு தந்து ஒத்துழைப்பது உறுதி.

புதுக்கோட்டைப் பிரதேச மக்களுக்கும் சரி, பாதிக்கப்பட்டுள்ள தொழிலாளர்களுக்கும் சரி, மாநில அரசாங்கம் உடனே தலையிட்டு மில்லைத் திறக்க ஏற்பாடு செய்யக் கடமைப்பட்டுள்ளது என்று வலியுறுத்த விரும்புகிறோம்.

தொழிலாளர்கள் தங்களுடைய உரிமைகளுக்காகவும், சம்பள பாக்கிகளுக்காகவும், மில் திறக்கப்பட்டு சர்க்கார் அதை நடத்துவதற்காகவும் கிளர்ச்சியைத் தொடர்ந்து நடத்தி வருகிறார்கள். பொதுமக்களின் ஆதரவு அவர்களுக்கு திரள்வது நிச்சயம். காவேரி மில்லைப் பொறுத்தவரையில் தொழிலாளிகள் எவ்வளவோ பொறுமையுடனும் பொறுப்புணர்ச்சியுடனும் தன்னலமறுப்புடனும் பல கஷ்டங்களையும் சகித்துக்கொண்டு வேலை செய்து வந்துள்ளார்கள். குற்றவாளிக்கூண்டில் நிற்கவேண்டியது மில் நிர்வாகம்தான். இந்த உண்மையை அப்பிரதேசம் முழுதும் நன்கறியும்.

இப்போது தொழிலாளர்களின் சங்கங்கள் தனித்தனியாகத் தங்களது போராட்டங்களை நடத்தி வருகின்றனர். ஒன்றுபட்ட போராட்டமாக அது உருப்பெருவதும் முற்றிலும் சாத்தியம். தொழிலாழிவர்க்கத்தின் ஒற்றுமை மனோபாவத்தையும் போராட்ட உணர்வையும் யாரும் கூறுபோட்டு நிரந்தரமாகப் பிரித்து வைத்துவிடமுடியாது. தொழிலாளர்களின் ஐக்கிய போராட்டம் வெற்றி காண்பது உறுதி. போராடிவரும் தொழிலாளர்களுக்கு எங்களது முழு ஆதரவையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# நமது அமைச்சரவைகளால் புரட்சி உணர்வு மங்காது போராட்டக் கருவியாக விளங்கும்!

(3ம் பக்கத் தொடர்ச்சி)

கங்கள் சிலவற்றை உச்சரித்து அவர்கள்பொதுவேலை நிறுத்த பாரம்பரியம் வளர்ந்து வருவதாகவும் (பொதுவேலை நிறுத்தத்தின் முக்கியத்துவத்தை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை என்று கூறத்தேவையில்லை.) மக்கள் புதிய உத்வேகத்தைப் பெற்றுவருவதாகவும் புதிய உணர்வு வளர்ந்து வருவதாகவும் என்றாலும் மக்களுக்குச் சில சலுகைகள் அளித்த மாத்திரத்தில் இந்தக் கண்ணோட்டம் சிதறி விடுவதாகவும் கூறுகின்றனர். இந்தப் "புரட்சியாளர்களின்" பல்டிகளை யாரும் மிஞ்ச முடியுமா!

அவர்களுடைய கணிப்பில் வார்த்தை ஜாலங்கள் இருந்தாலும் நெருக்கடியைப் பற்றி அடிப்படையாக அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. பெருந்துயரில் அல்லலுறும் மக்களுக்கு கொஞ்சம் கூட அவர்கள் அனுதாபம் காட்டத்தயாராக இல்லை. ஆகவேதான் சலுகைகள் அளிப்பது ஆபத்தானது என்று அவர்கள் வெளிப்படையாகக் கூறுகின்றனர். தேர்தலில் மக்கள் காங்கிரசுக்கே ஓட்டளிக்க வேண்டும். அப்போது தான் அவர்களுக்குச் சலுகைகள் கிட்டாது, புரட்சிக்கு மக்கள் எப்போதும் தயாராக இருப்பர் என்பது அவர்களுடைய கொள்கையின் வாதம்.

### கட்சி நிலை

நாம் தேர்தலைப் பகிஷ்கரித்திருக்கவேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. காங்கிரசல்லாத அரசாங்கங்கள் காங்கிரஸ் அரசாங்கங்களைவிட ஆபத்தானதாம். ஏனெனில் மக்களுக்கு அவைகள் சலுகைகள் அளிக்க முடியுமாம். எனவே அவற்றின் மீது தாக்குதலைத் தீவிரப்படுத்த வேண்டுமாம். மேற்குவங்கத்திலுள்ள காங்கிரசல்லாத அரசாங்கம் காங்கிரஸ் அரசாங்கத்தின் பெயர் பலகைதானும். முதலாளிவர்க்க அரசாங்கத்தை அம்பலப் படுத்துவதற்காகவும் மக்களிடம் பேசுவதற்காகவும் நாடாளுமன்ற அரங்கத்தை உபயோகித்து தேர்தல் பிரமைகளை முறியடிக்க வேண்டிய அவசியத்துக்கிடமின்றி, ஆளும் வர்க்கங்களை அம்பலப்படுத்த, மாநில அதிகாரங்களின் போலித்தன்மையை அம்பலப் படுத்த முதலாளிவர்க்க-நிலப்பிரபுத்துவ அரசு அமைப்பு முழுதையும் அம்பலப்படுத்த மாநிலங்களில் அமைச்சரவைகளுக்கு இடமின்றி, போராட்டக்கருவியாக அமைச்சரவைகளைப் பயன்படுத்த அவசியமின்றி, இந்திய நிலைமை புரட்சிப்பாதையில் துரிதமாகச் சென்று கொண்டிருக்கிறதாம். சுருக்கமாக, தற்போதைய காலகட்டத்தில் நேரடிப் புரட்சிப்போராட்டமே தேவையானதாம். குறைந்தது நாடாளுமன்றம் சம்பந்தமான மற்ற போராட்ட இயக்கங்கள் காலத்துக் சொவ்வாததாம்.

இந்த நிலைக்கும் கட்சியின் நிலைக்கும் சம்பந்தம் எதுவுமில்லை என்பதை வாசகர்கள் கண்டுகொள்ள முடியும். இன்றைய அரசைப் பற்றிய அவர்களுடைய வர்ணனையின் தர்க்க ரீதியான முடிவிலிருந்து இது எழுகிறது. மற்ற கட்சிகளின் தத்துவார்த்த அரசியல் பிடிப்பிலிருந்து மக்களை விடுவிக்கும் பணிக்கு அவர்கள் நிலை தடங்கலாக உள்ளது. அவர்கள் நிலையை அனுஷ்டித்தால் புரட்சி அரங்குக்குச்செல்லும் தருணத்தில் மக்களைக் கட்சியிடமிருந்து தனிமைப் படுத்தும்.

தேர்தலில் போட்டியிட்டு சட்டமன்றங்களுக்கு நம் தோழர்களை அனுப்பும் நம் கட்சியின் தனித்தன்மையை விட்டுக்கொடுக்காமல் மற்ற கட்சிகளுடன் ஐக்கிய முன்னணி அமைக்கும், அடிப்படைப் பிரச்னைகள் இந்தியா—சீன பிரச்னை உட்பட நம்முடைய திட்டம் முழுதையும் மக்களிடம் பரப்பும் கேரளத்திலும், மேற்குவங்கத்திலும் மாற்று அமைச்சரவை கோஷங்களை முன்வைக்கும், இந்த அமைச்சரவைகளில் பங்கு கொள்ளும் நம் கட்சியால் பின்பற்றபட்ட நிலைதான் சரியான நிலை என்று அனுபவம் காட்டியுள்ளது.

கட்சி பலவீனமான மாநிலங்களில் கூட விரிந்த மக்கள் பகுதியை அணுகவும் தற்போதைய அரசின வர்க்கத்தன்மையை அம்பலப்படுத்தி நம்முடைய கோஷங்களைப் பரப்பவும் அது வகை செய்துள்ளது. மக்களிடையே திரிபுவாதிகளுக்கு எதிரான நம்முடைய போராட்டத்தை நடத்தவும் அது உதவியுள்ளது.

கட்சியின் பலமான மாநிலங்களில் நம்முடைய தளத்தை பலப்படுத்த அது உதவியுள்ளது. நமக்கு ஆதரவு நல்கும் மக்களை அரசியல் ரீதியாக உருப்பெற செய்யவும் உதவியுள்ளது. மேலும் விரிந்த ஜனப் பகுதிகளை அரசியல் ரீதியாக அணுகவும் இந்திய-சீனப்பிரச்னையில் சிருஷ்டிக்கப்பட்ட குரோதங்களைத் தகர்த்தெறியவும் முதலாளிவர்க்கத்தின் பிரதானக் கட்சியைத் தனிமைப் படுத்தவும் தேர்தலில் காங்கிரசை முறியடிக்கவும் அந்நிலை உதவியுள்ளது. எதிர் கட்சிகளில் நம் மிகப் பலம் பொருந்திய கட்சியாக உருவாக அது உதவியுள்ளது.

இது மக்களைத் தீவிரமடையச் செய்யவும் அரசியல் நிலைமைகள் பற்றி புரிந்துகொள்ள ஆர்வம் காட்டவும் வழி வகுத்துள்ளது. மக்களை முன்னின்று அழைத்துச் செல்லும் உறுதியான கட்சியாக நம் மீது நம்பிக்கையை வளர்த்துள்ளது. நண்பர்களிடமும் எதிரிகளிடமும் தாக்குதலுக்கு மத்தியில் மேற்குவங்க நகரசபைத் தேர்தல்களில் நம்மை பிரமாதமாக வெற்றி பெற செய்து மக்கள் நம் மீது அதிக நம்பிக்கையைக் காட்டியுள்ளனர்.

வெகுஜன இயக்கங்களை முன்னேற்றவும் நெருக்கடியினுல் புரட்சிபோராட்டங்களில் இறங்கும் மக்களின் ஸ்தாபன அரசியல் தளத்தை வலுப்படுத்தவும் இந்த நம்பிக்கையையும், பலத்தையும் உபயோகிக்க முடியும். இதை மக்கள் போராட்டங்களைத் துரிதப் படுத்துவதற்கு நாம் இன்றுஉபயோகிக்காமலிருந்தால் அது சந்தர்ப்பவாதமாகும்.

(அடுத்த இதழில் முடியும்)

# காங்கிரசுக்கு ஐந்தாம் படை!

# கட்சி விரோதக் கும்பலின் வேஷம் கலைகிறது!

**பி. டி. ரணதிவே**

அவர்கள் உதிர்த்துள்ள கீழ் வரும் முத்துக்களைப் பாருங்கள் : "பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் புகுத்தியதின் விரிவான மறுபதிப்பே இந்திய நாடாளுமன்றமும், ஜனநாயகமும்" (இம்மாதிரி இதற்கு முன் யாரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு புகழ் மாலை சூட்டியதில்லை.)

"வெவ்வேறு மாநிலங்களிலும் குறிப்பாக மேற்கு வங்கத்திலும் கண்ட வெகு ஜன இயக்கங்களை அவற்றின் இயல்பான முடிவுக்குக் கொண்டு வர உணர்வு பூர்வமான முயற்சிகள் செய்யப்பட்டால் தேர்தலைப் பகிஷ்கரிக்குமாறு மக்களைத் தூண்ட முடியும். இயக்கங்களை மேல் மட்டத்திற்கு உயர்த்த முடியும். இத்திசையில் எந்த முயற்சியும் செய்யாமல் பெரிய இயக்கம் பற்றிய கோஷத்தின் கீழ்—48 மணிநேர வேலை நிறுத்தம், ஹர்த்தாலில் இயக்கம் நிறுத்தப் பட்டது. இந்தச் சமயத்தில் தேர்தல் நெருங்கியதால் மக்கள் தேர்தல் மனோபாவம் கொண்டுள்ளனர் என்ற சாக்கில் எல்லாக் கவனமும் தேர்தலிலேயே சென்றது. இது மிகவும் அபாயகரமான சந்தர்ப்பவாதமாகும்" என்று அவர்கள் மேலும் கூறுகின்றனர்.

### தேர்தலும் கட்சியும்

மற்ற வழியில் செய்வதை விட தேர்தல் மூலம் ஆட்சித் திட்டம் முழுதையும்—மக்கள் ஜனநாயகப் புரட்சித் திட்டத்தை மக்களிடம் கொண்டு செல்ல முடியும், லட்சக் கணக்கான மக்களிடம் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் சதிகளை அம்பலப்படுத்தமுடியும், பெரு முதலாளிகள் தலைமையிலமைந்த முவலாளிவர்க்க, நிலப்பிரபுத்துவ அரசின் பிற்போக்கு வர்க்கத் தன்மையை அம்பலப்படுத்த முடியும், நம் திட்டத்தை மற்ற கட்சிகளின் திட்டங்களுடன் ஒப்பு நோக்கிக் காட்ட முடியும், கட்சித் தலைமை சிறையிலிருந்தபோது சிருஷ்டிக்கப்பட்ட சீனஎதிர்ப்பு வெறியை எதிர்த்துப் போராடுவதற்கு நமது அரங்கை விஸ்தரிக்க முடியும். வர்க்கப் போராட்டங்களில் மக்களின் நம்பிக்கை அதிகரிக்கும் முறையில் முடிந்த அளவு அதிக இடங்களில் காங்கிரசைத் தோற்கடிக்க மக்களிடம் நேரடியான காங்கிரஸ் எதிர்ப்பு ஓட்டுக்களைக் கோர தேர்தல் கட்சிக்கு வாய்ப்பளித்தது. முதலாளி வர்க்க—நிலப்பிரபுத்துவ அரசின் வர்க்கத் தன்மையை அம்பலப்படுத்தவும் மக்களைக் கிளர்ந்தெழச் செய்யவும் தற்போதைய மாறிய சூழ்நிலையில் கூட மாநில சட்ட மன்றங்களையும், நாடாளுமன்றத்தையும் பயன் படுத்திக் கொள்ள முடியும் என்றெல்லாம் இந்தக் கட்சி விரோதக் கும்பலிடம் சொல்லிப் பயனில்லை, அவர்கள் கருத்துப்படி இந்த அரங்கம் அனாவசியமானது. அதிகபட்சமாக கூறினால் ஸ்தானங்களுக்குப் போட்டியிடாமல் தேர்தல் இயக்கத்தில் பங்கு கொள்ளலாம் என்றும் ஸ்தானங்களுக்குப் போட்டியிடுவது நாடாளுமன்ற தத்துவம் என்றும் ஸ்தானங்களை நாடாமல் பிரசாரம் செய்வதற்கே முற்பட வேண்டும் என்றும் அவர்கள் வாதிக்கின்றனர்.

முதலாளிவர்க்க பாராளுமன்ற ஸ்தாபனங்களைப் பயன்படுத்திக் கொள்ளுவதை கட்சி எதிர்ப்பாளர்கள் தாக்கியுள்ளனர். அவ்வாறு செய்வது திரிபுவாதப் பாதையைப் பின்பற்றுவதாகும் என்று அவர்கள் கூறுகின்றனர். நிலைமை நாள்தோறும் புரட்சிகரமாக மாறிவருவதால் தேர்தலைக் கட்சி பகிஷ்கரித்திருக்க வேண்டும் என்றும் அவர்கள் கூறுகின்றனர். டூமாவை (ரஷ்ய நாடாளுமன்றம்) லெனின் பகிஷ்கரிக்கவில்லையா என்றும் அவர்கள் கேட்கின்றனர்.

இந்நிலையை வற்புறுத்தி ஓரிடத்தில் அவர்கள் கீழ்வருமாறு கூறியுள்ளனர். "வரும் பொது தேர்தலில் கட்சி முழுதையும் ஈடுபடுத்த ஆயத்தம் செய்கிறீர்கள். இவ்விதம் மக்களுக்கு நம்முடைய சட்ட ரீதியான போராட்டங்கள் மூலம் முதலாளி வர்க்க நாடாளுமன்ற ஜனநாயகத்தின் உண்மை சொரூபத்தை அம்பலப் படுத்துவதற்குப் பதில் பாசிசத்தை அம்பலப்படுத்துவதற்குப் பதில் பூர்ஷ்வா அடக்கு முறைக்கு உட்படும் முறையில் நம்முடைய சிறந்த கட்சி அணிகளை வெளிக் காட்டுகிறீர்கள். (நம்முடைய அனுபவம் போதிப்பதற்கிணங்க தவிர்க்க முடியாதபடி இந்த அடக்கு முறை வரும்). மேற்கு வங்கத்தில் ஐக்கிய முன்னணி அரசாங்கம் அமைத்துள்ளீர்கள். (கேரளத்திலும் மற்ற மாநிலங்களிலும் இவ்வாறு செய்யத் திட்டமிட்டுள்ளீர்கள்). நாடாளுமன்ற பெரும்பான்மை மூலம் கூட்டு அரசாங்கம் அமைக்கும் நோக்கத்தில் சமூக ஜனநாயகவாதிகளுடனும் முதலாளி வர்க்க சமூக சீர்திருத்த வாதிகளுடனும் தொழிலாளி வர்க்கக் கட்சியின் கூட்டை உண்டு பண்ணுகிறீர்கள்" (பொலிட் பீரோவுக்கும் மத்திய கமிட்டிக்கும் அனுப்பப்பட்ட அனாமதேயக் கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டது)

### காங்கிரஸ் பாணியில்

இவர்கள் உதிர்த்துள்ள முதல் முத்து நாடாளு மன்ற ஜனநாயகத்தைப் பாசிசம் என்று கூறுவதாகும். பாசிசத்துக்கு புகழ் மாலை சூட்டப்படுகிறது. ஜெர்மனியிலும், இத்தாலியிலும் அடால்ப் ஹிட்லரும் பெனிடோ முசோலினியும் நாடாளு மன்ற ஜனநாயகத்தைப் புகுத்தியிருந்தார்கள் போலும்! இந்த ஆழ்ந்த நிர்ணயிப்பை இத்துடன் விட்டு விடலாம்.

நாடாளு மன்ற ஜனநாயகத்தைப் பாசிசம் என்றும் அதைத் தொடக் கூடாது என்றும் எந்த அரசியல் கட்சியுடனும் ஐக்கிய முன்னணி சேரக் கூடாது என்றும் சட்ட மன்றங்களில் பெரும்பான்மை பலம் பெற்று அமைச்சர் பதவிகளிலிருந்து காங்கிரசை வெளியேற்ற முயற்சிப்பது பாவம் என்றும் கூறியுள்ளதே கவனிக்கத் தக்கதாகும்.

காங்கிரஸ் ஆட்சிக்கு இது வக்காலத்து ஆகாதா? ஐக்கிய முன்னணி நெல்லிக்காய் மூட்டை என்றும் சந்தர்ப்பவாதிகளின் கூட்டு என்றும் காங்கிரஸ் ஆட்சியாளரே திரும்பத் திரும்பக் கூறியுள்ளனர். சமூக ஜனநாயகவாதிகள் முதலாளி வர்க்க சீர்திருத்தவாதிகள் போன்ற பதப் பிரயோகங்கள் அவர்களுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் அவர்களே பயன்படுத்தியிருப்பார்கள். இந்த கட்சி விரோதக் கும்பல் ஏன் காங்கிரசல்லாத அமைச்சரவைகளை எதிர்க்கின்றனர்? நமது அமைச்சர்கள் அவதியுறும் மக்களுக்குச் சிறிது நிவாரணம் அளித்துவிட முடியும் இதன் மூலம் புரட்சியிலிருந்து மக்களைத் திசை திருப்பிவிட முடியும் என்றும் அவர்கள் அஞ்சுகின்றனர்.

அப்பாவி மக்கள்! பட்டினிக் கொடுமையிலிருந்து சிறிது நிவர்த்தி கிட்டுவதுகூட அவர்களைக் கெடுத்து விடுமாம். ஆகவே காங்கிரசல்லாத அரசாங்கத்தின் வர்க்கத் தன்மையை அம்பலப்படுத்துமாறு எல்லா உண்மையான மார்க்சீயவாதிகளையும் அவர்கள் கேட்கின்றனர். இந்த முயற்சியில் காங்கிரஸ் ஏஜெண்டுகளின் உதவி அவர்களுக்குத் தாராளமாகக் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இந்த கட்சி விரோதக் கும்பல் மேலும் கூறுவதை கேளுங்கள் : "மேற்கு வங்கத்திலுள்ள காங்கிரஸ் அல்லாத அரசாங்கம் வேறு பெயர் பலகையுடனுள்ள காங்கிரஸ் அரசாங்கமேயாகும்" இந்த அரசாங்கத்துக்கு மக்கள் ஆதரவு இருக்கிறது என்று நாம் கூறுவதை அவர்கள் ஆட்சேபிக்கிறார்கள். "வேறு பெயர் பலகையுடனுள்ள காங்கிரஸ் அரசாங்கத்துக்கு மக்கள் ஆதரவா? என்னே உங்களது மேதா விலாசம்" என்று நம்மைப் பற்றி அவர்கள் விமர்சிக்கிறார்கள். எனவே காங்கிரசல்லாத ஐக்கிய முன்னணி அரசாங்கம் என்பது காங்கிரசின் மற்றொரு பெயர் பலகையாம். அதற்கு மக்கள் ஆதரவுகூட கிடையாதாம். (இவ்வாறு கூறுவது ஐக்கிய முன்னணிக் கட்சிகள் திடீரென மாறி விட்டன அல்லது மக்களை ஏமாற்றியுள்ளன என்று கூறுவதற்குச் சமம். இவர்களைக் காங்கிரஸ்காரர்கள் கட்டித் தழுவி "ஓ சகோதரர்களே இவ்வளவு நன்றாக எங்கள் சார்பில் நீங்கள் வாதிப்பது தெரியாமல் போய் விட்டதே! நீங்கள் எங்களுடைய ஐந்தாம் படை என்பது தெரியாமல் போய் விட்டதே என்று கூற வேண்டும்.)

### யாருடைய பிரமைகள் ?

என்றாலும் இந்த அரசாங்கத்துக்கும் அசல் காங்கிரஸ் அரசாங்கத்துக்கும் வித்தியாசம் இருப்பதாக கட்சி விரோதக் கும்பல் கருதுகிறது. அதனால்தான் அவர்கள் காங்கிரஸ் அரசாங்கத்தைவிடக் காங்கிரசல்லாத அரசாங்கத்தை அதிகம் எதிர்க்கின்றனர். அவர்களுடைய தஸ்தாவேஜு ஒன்றில் மாநில காங்கிரஸ் அரசாங்கங்களையோ மத்திய அரசாங்கத்தையோ எதிர்த்துப் போராடுமாறு அழைப்பு விடுக்கப்படாமல் காங்கிரசல்லாத அரசாங்கத்தை மட்டும் அம்பலப்படுத்துமாறு அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. ஏன்? "இந்தியாவின் இந்த அரசியல் நெருக்கடி கால கட்டத்தில் இந்தக் காங்கிரசல்லாத அரசாங்கத்தை அம்பலப்படுத்துவது எல்லா உண்மையான மார்க்சீயவாதிகளின் கடமையாகும். ஏனெனில் இந்த அரசாங்கம் முதலாளி வர்க்க தந்திரங்களைக் கையாண்டு பிரதான எதிரியிடமிருந்து கவனம் திருப்பும் முறையில் மக்களுக்குச் சில சலுகைகளை அளிக்கும்" என்று இந்தக் கட்சி விரோதக் கும்பல கூறுகிறது.

சாயம் வெளுத்து விட்டது. காங்கிரஸ் அரசாங்கத்தைப் போலன்றி காங்கிரசல்லாத அரசாங்கம் மக்களின் புரட்சி உணர்வை மங்கச் செய்யும் முறையில் சில சலுகைகளை அளிக்க முடியும் என்று அவர்கள் கருதுகின்றனர். அவர்கள் கூறுவது அவர்களுக்கே விளங்குகிறதா? பாசிசம் என்று அவர்கள் வர்ணிக்கும் முதலாளிவர்க்க ஜனநாயகம் பற்றி யாருக்குப் பிரமை இருக்கிறது? உண்மை அதிகாரம் மக்களிடத்திலும் அவர்களுடைய பிரதிநிதிகளிடத்திலும் இல்லையாதலால் அமைச்சரவை மக்கள் அணியின் மக்கள் போராட்டத்தின் கருவியாகத்தான் செயல்பட முடியுமே யொழிய அடிப்படைப் பிரச்னைகளைத் தீர்க்க முடியாது என்று நாம் கூறிவருகிறோம். இந்த இடதுசாரி வேஷதாரிகள் மோசமான பொருளாதார நெருக்கடியில் காங்கிரசல்லாத அமைச்சரவை மக்களுக்குச் சலுகை அளிப்பதின் மூலம் போராட்டங்களிலிருந்து கவனத்தைத் திசை திருப்பிவிடும் என்று கருதுகின்றனர்.

### மக்களுக்கு அவமதிப்பு

இரண்டாவதாக இந்தக் கும்பல் மக்களுக்கு எவ்வளவு அவமதிப்புச் செய்கின்றனர்? மக்களைப் பற்றிய அவர்களது கருத்து காங்கிரஸ் அல்லது முதலாளித்துவ யஜமானர்களின் கருத்துக்கு மாறுபட்டதல்ல. ஒரு சில துண்டுகளை வீசியெறிந்து இந்த ஒன்று மறியாத மக்களைக் கட்டுப்படுத்த முடியும் என்று அவர்கள் எல்லாம் கருதுகின்றனர். மேற்கு வங்கத்திலுள்ள காங்கிரசல்லாத அரசாங்கம் மக்களின் பொருளாதார துயரை சிறிதளவு நிவர்த்திக்க முடிந்து வேலையின்மைக்கும், பட்டினிக் கொடுமைக்கும், விலையேற்றத்துக்கும் பலியாகியுள்ள மக்களுக்கு உடனடி நிவாரணம் தேவையுற்று அமைச்சரவை தன்னிடமுள்ள அதிகாரத்தை எல்லாம் பயன்படுத்தி அதை அளிக்க முற்பட்டால் மக்களின் அடிப்படைப் பிரச்னைகள் தீர்க்கப்பட்டு அவர்கள் போராட்டத்திலிருந்து பின்னடைந்து விடுவார்களா? அவர்கள் எதிர்பார்த்ததற்கும் தேர்தல் வெற்றிக்குப்பின் உண்மையில் கிடைத்துவரும் [illegible]ாரணத்துக்கும் இடை[illegible]ள்ள வித்தியாசம் இ[illegible]ய அமைப்பை அடியோடு மாற்றினாலன்றி நிலைமையில் தீவிர மாறுதல் ஏற்படாது என்று அவர்களை விரைவாக உணரச் செய்யாதா?

பெரும் சலுகைகள் கிட்டுவது பிரதான எதிரியிடமிருந்து மக்களின் கவனத்தைத் திருப்பும் என்ற பீதி, நிலைமையைப் பற்றிய அவர்களுடைய தவறான கணிப்பைத்தான் அம்பலப் படுத்துகிறது. லெனின் வாச

(2ம் பக்கம் பார்க்க)

---

## நெசவுத் தொழிலாளர் இன்னலை அகற்றுக!

அருப்புக்கோட்டை கைத்தறிக் கூலி நெசவுத் தொழிலாளர் சங்கத்தார் கூலி நெசவுத் தொழிலாளருக்கு இலவச குடியிருப்பு வசதி கோரியும் நெசவுத் தொழிலுக்கு தொழிலாளர் பாதுகாப்பு தொழிற்தகராறு போனஸ் சட்டங்களை அமுல் நடத்தக் கோரியும், கூட்டுறவு நூற்பாலை போன்ற நிறுவனங்களில் கூலி நெசவுத் தொழிலாளருக்கு வேலை வாய்ப்புக்கோரியும், தொழில் நுட்பக் கல்வியும் இலவச குடும்ப அலவன்சு கோரியும், அருப்புக்கோட்டையில் சிறு ரக தொழில்கள் அதிகமாக ஆரம்பித்து அவற்றில் கூலி நெசவுத் தொழிலாளருக்கு தொழில் வசதிகள் செய்து தரக் கோரியும் தமிழக வீட்டு வசதி, தொழிலாளர் நலத் துறை அமைச்சருக்கு மனு ஒன்றை அனுப்பியுள்ளனர்.

# குறிப்புகள்

## துரோகப் பாதையில் ஐ. நா!

ஐந்து வாரங்கள் நடைபெற்ற ஐ நா. பொதுச்சபையின் அவசரக் கூட்டம் எந்த உருப்படியான முடிவும் எடுக்காமல் கலைந்தது நீண்ட சொற்பொழிவுகள் எண்ணற்ற நகல் தீர்மானங்கள், திருத்தங்கள் ஒருமைப்பாடு காண வல்லரசுகளுக்கு இடையே ரகசியப் பேச்சு வார்த்தைகள் அனைத்துமே வீண் போயின.

அரேபிய நாடுகளை அமெரிக்க உதவியுடன் தாக்கிய இஸ்ரேலை கட்டுப்படுத்தி பழைய நிலைமைக்கு கொண்டு வர இந்த உலக மன்றத்தின் ஐந்து வார முயற்சிகள் தோற்கடிக்கப்பட்டன. ஐ. நாவின் பந்தோபஸ்துக் குழு இப்பிரச்சினை பற்றி மீண்டும் விவாதிக்குமாம்.

துரதிர்ஷ்டம் பிடித்த அராபிய நாடுகளுக்கு அன்னை இயற்கை ஏராளமான எண்ணை ஊற்றுக்களை வாரி வழங்கியுள்ளது அவர்களின் சாபக்கேடு போலும்! அமெரிக்காவுக்கு தலையாட்டும் பொம்மைகளாக அராபிய நாட்டின் ஆட்சியாளர்கள் எண்ணை ஊற்றுக்களனைத்தையும் கொள்ளையடிக்க அமெரிக்கர்களுக்கு தாரை வார்த்துக் கொடுத்திருந்தால் இந்த நெருக்கடியே தோன்றியிருக்காது.

அராபிய மக்கள் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்தனர். அவர்களை அடக்கி எண்ணெய்க் கிணறுகளை ஆதிக்கத்தில் வைத்துக கொள்ளவே பிற்போக்கு இஸ்ரேலுக்கு போர் உடை அணிவித்து அரேபிய நாடுகளை தாக்கச் செய்தது அமெரிக்கா.

இந்த அக்கிரமத்தை இந்த ஐ நாவால் தடுக்க முடியவில்லை. இஸ்ரேல் கைப்பற்றிய அராபிய மண்ணை திருப்பிக் கொடுக்கச் செய்ய வழிவகுக்க முடியவில்லை, இது எதைக் காட்டுகிறது.

உலகில் ஆதிக்கம் செலுத்த அமெரிக்காவின் ஒரு கருவியாகவே ஐ. நா. மன்றம் பணிபுரிகிறது. வியாட்நாம், கொரியா, காஷ்மீரம், காங்கோ,-இன்னும் எத்தனையோ நாடுகளின் துயரக்கதையை இதை நிருபிக்க உதாரணமாக காட்டலாம். ஐ. நாவின் கொடியும் படையும் தானே அமரர் லுமும்பாவை கொன்று காங்கோவை அமெரிக்க பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளின் கொள்ளைக் காடாக மாற்றியது.

ஐ. நாவின் வரலாறு என்பதே ஒரு துரோக வரலாறு ஆகும். அமெரிக்காவின் சதிகளுக்குப் பட்டுத்திரை போடும் ஒரு அமைப்பாகவே அமைந்துள்ள ஐ. நா இன்று நெருக்கடிக்குள்ளானதில் வியப்பிற்கிடமில்லை. எழுபது கோடி மக்களைக் கொண்ட சீனக் குடியரசுக்கு 1949லிருந்து ஐ. நாவில் இடமளிக்காமல் செய்வதற்கான அமெரிக்க சூழ்ச்சி இதுவரை வெற்றி பெற்றுள்ளது. விடுதலைக்காக போராடும் நாடுகளுக்கு எதிரான ஒரு கருவியாகவே அதை ஏகாதிபத்திய வாதிகள் பயன்படுத்தி வருகின்றனர்.

நவீனத் திரிபுவாதிகள் இப்போதாவது கண் திறப்பார்களா? அடிமைப்படுத்தப்பட்ட நாடுகளுக்கெல்லாம், குறித்த காலத்திற்குள் விடுதலையளிப்போமென்று ஐ. நா தீர்மானம் நிறைவேற்றிய போது ஐ. நாவின் சிறப்பைப் பற்றி வானளாவப் புகழ்ந்த திருத்தல் வாதிகள் இப்போது என்ன சொல்வார்களோ! சென்ற மே மாதம் நடைபெற்ற ஐ. நா மன்றத்தின் கூட்டத்தில் ஒரு மாத காலம் பேரம் பேசி தென்மேற்கு ஆப்பிரிக்காவுக்கு ஜூன் 18ம் தேதிக்குள் விடுதலை என்று அழகான தீர்மானமொன்றை தீட்டினர். தென் ஆப்பிரிக்க வெள்ளையர்களின் திமிர் பிடித்த அரசு அந்தக் தீர்மானத்தை குப்பைத் தொட்டியில் எறிந்தது. ஐ நா இவ்வாறு ஏகாதிபத்தியத்தின் கருவியாக மாறியதே அதன் நெருக்கடிக்குக் காரணம்.

இந்தியப் பெருமுதலாளிகளின் பிரசார ஏடுகளும். ஜனசங்கம், சுதந்திரா கட்சியும் இந்தியப் பேரரசும் அமெரிக்காவின் இந்த சதியை அம்பலப்படுத்துவதற்கு பதிலாக உண்மையைத் திரித்துக் கூறுகின்றனர். இஸ்ரேலுக்கு ஆதரவாக கூக்குரல் கிளப்ப சுதந்திரா ஜனசங்கம் படைவரிசையில் அணிதிரண்டு பணியாற்றும் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியும் சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சியும் அமெரிக்காவின் இந்த சதியை மூடி மறைக்க முயற்சிக்கிறார்கள்.

ஐ. நா. மன்றம் அரேபிய மக்களுக்கு கொடும் துரோகமிழைத்து விட்டது. இதை இந்திய மக்கள் வன்மையாக கண்டிக்க வேண்டும். சுதந்திரா, ஜனசங்கம், பி.எஸ்.பி, எஸ். எஸ். பி. கட்சிகளின் அமெரிக்க ஆதரவுப் போக்கையும் அம்பலப்படுத்தவேண்டும்.

★

## ஜூலை 23!

தி.மு.கவின் வேண்டுகோளுக்கு இணங்க காங்கிரஸ் நீங்கலாக அனைத்துக் கட்சிகளும் ஒன்றுபட்டு சேலம் உருக்காலைத் திட்டத்தையும் தூத்துக்குடி துறைமுகத் திட்டத்தையும் நிறைவேற்றக் கோரி ஜூலை 23ம் தேதி எழுச்சி நாள் நடத்தினர். இந்த அறைகூவல் கேட்டு தமிழகமே எழுச்சியுற்றது, காங்கிரசை தேர்தலில் முறியடிக்க திரண்ட அணியைவிட வலுவான அணிவகுப்பை ஜூலை 23ம் நாள் பார்த்தோம். தேர்தல் காலத்தில் காங்கிரஸ் எதிர்ப்பு அணியிலிருந்துவிலகி நின்ற வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் ஜூலை 23ல் கூட்டு மேடையில் வந்தது வரவேற்கத்தக்கதே.

ஜூலை 23 தமிழ் மக்களின் இதயத் துடிப்பை டெல்லி ஆட்சியாளருக்கு ஒளிவு மறைவின்றி புலப்படுத்தியுள்ளது.

நான்காவது ஐந்தாண்டு திட்டத்தில் சேலம் தூத்துக்குடி திட்டங்கள் இடம் பெற வேண்டும் என்று மக்கள் ஆரவாரம் செய்தனர். ஆனால் சென்ற ஆண்டு ஏப்ரலில் தொடங்கப்பட வேண்டிய நான்காவது திட்டம் இன்னும் உருவாகவில்லை. சமீபத்தில் உருவாகும் அறிகுறிகளையும் காணோம்!

திட்டமிட்ட பொருளாதாரம் என்ற பெயரால் பெரும் முதலாளிகளுக்கு தொழில் நடத்த அந்நியக் கடனைத் தேடிக் கொடுக்கவும் விலைவாசிகளை உயர்த்தி இந்நாட்டு மக்களை கொள்ளையடிக்கவும் தான் உதவும். நேரு வகுத்த இந்த ஐந்தாண்டுத் திட்டங்களால் 75 ஏகபோகக் குடும்பங்கள் நாட்டின்பொருளாதாரத்தை ஆட்டிபடைக்கும் நிலைக்கு உயர்ந்தன. ஏறத்தாழ 6000 கோடி ரூபாய் கடன்கொடுத்த அந்நியர்கள் இந்நாட்டை அவர்களின் வேட்டைக்காடாக மாற்றினர். அரசியல் சட்டத்தின் பாதுகாப்புடன் நிலப்பிரபுக்களும் வர்த்தகச் சூதாடிகளும் உணவு நெருக்கடியை தீவிரப்படுத்தினர். புதிய தொழிற்சாலைகள் எங்கே அமைக்க வேண்டும், எந்

**வி. பி. சிந்தன்**

தத் தொழிலில் மூலதனம் போடவேண்டுமென்று இந்த 75 ஏகபோகக் குடும்பங்களும் அந்நியர்களும் நிர்ணயிக்கும் நிலைமை உருவாகியுள்ளது. இதுவே நேரு வகுத்த திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியின் கசப்பான விளைவுகள்.

செல்வம் குவியக் குவிய அரசியல் அதிகாரமும் டெல்லியில் குவிந்தது. பல மாநிலங்கள் புறக்கணிக்கப்பட்டன. மாநில அரசுகளின் உரிமைகள் படிப்படியாகப் பறிக்கப்பட்டது. வருவாய்க்கான வழி வகைகள் இங்கே உருவாக்குவதற்கும் பதிலாக மேலும் மேலும் அந்நியர்களுக்கு அடிபணியும் பாதையில் சென்றனர். இதன் விளைவாக திட்டத்திற்கே தீராத நெருக்கடி தோன்றியது.

20 ஆண்டுகளாக காங்கிரஸ் ஆட்சியினரால் அனுஷ்டிக்கப்பட்ட தவறான இந்தக் கொள்கைகளே இந்த நெருக்கடிக்கு காரணம். இந்தப் பாதையிலிருந்து விலகி சரியான மாற்றுக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தொழில் வளர்ச்சிக்கு முயன்றால்தான் முன்னேறுவதற்கு வழி காண முடியும்.

சேலம் உருக்காலையும் தூத்துக்குடித் திட்டமும் ஏட்டளவில் மட்டும் நின்றது இந்தக் கொள்கையின் விளைவாகத்தான் என்பதை உணர்ந்து இந்தப் பிற்போக்குக் கொள்கையை முறியடிக்கும் அளவுக்கு மக்களைத் திரட்டிப் போராடினால்தான் தமிழ் மக்களின் நியாயமான விருப்பத்தை நிறைவேற்ற முடியும். டில்லிப் பேரரசை பணிய வைப்பது அவ்வளவு சுலபமல்ல. மொழிவழி மாநிலத்திற்காக நடைபெற்ற வீரம் செறிந்த போராட்டம் இதற்கோர் சான்றாகும். இந்தி மொழித் திணிப்பை எதிர்த்து தமிழகம் சிந்திய குருதியும் இதையேதான் காட்டுகிறது.

எல்லா தேசிய இனங்களுக்கும் சம உரிமை வழங்கும் ஜனநாயகக் கருத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் சட்டமோ அரசியல் அமைப்போ இன்று நமது நாட்டில் இல்லை. அத்தகைய ஒரு அமைப்புக்காக நடைபெறும் ஜனநாயகப் போராட்டத்தின் ஆரம்பமே ஜூலை 23!

இந்த எழுச்சி நாள் மட்டும் போதும் என்று எண்ணுபவர்கள் நிச்சயமாக ஏமாந்துவிடுவார்கள். டெல்லியின் ஏகபோக ஆட்சிக்கு எதிராக நாடெங்கும் நடைபெறும் மக்களின் கிளர்ச்சியுடன் ஒன்றிணைந்து தமிழ் மக்களை மேலும் மேலும் ஒன்றுபடுத்துவதன் மூலம்தான் ஜூலை 23ம் நாள் தமிழகம் ஒருமித்த குரல்எழுப்பிய நியாயத்தை பெற முடியும். இதை ஒப்புக் கொள்ள மறுப்போர் டெல்லி ஆட்சி பீடத்தில் அமர்ந்துள்ளனர். அவர்களை எதிர்த்து முறியடிப்பதன் மூலமே இந்த எழுச்சி வெற்றிபெற முடியும்.

★

## திருத்தல் வாதத்தின் திருத் தொண்டு!

''கேரளத்திலும் வங்கத்திலும் அமைந்துள்ள ஐக்கிய முன்னணி அரசாங்கத்தைக் கவிழ்க்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுக் கட்சி சதி செய்கிறது. வங்கத்தை பாழ்படுத்திய பிறகு சுந்தரய்யா இப்போது கேரளாவில் தனது கைவரிசையைக் காட்டுகிறார்'' இவ்வாறு வலதுசாரி கம்யூனிஸ்டுகளும அவர்களது ஏடுகளும் ஓயாமல் பிரச்சாரம் செய்து கொண்டு வருகின்றன. இத்தகைய புளுகுப் பிரசாரங்களைச் செய்யும் திருப்பணியில் வலதுசாரிகள் உள்துறை அமைச்சர் திருவாளர் சவானையும் மிஞ்சிவிட்டனர். தமிழகத்தில் அவர்களது ஏடான ஜனசக்தியையும் சாந்தியையும பார்த்தாலே இது நன்கு விளங்கும்.

''மத்தியதர குமஸ்தாக்களையும் கேரோ செய்து பட்டினி போடும் போராட்டத்தையும், தனிநபர்களைத் தாக்கும் போராட்டத்தையும் வங்கத்தில் மார்க்சிஸ்டுகள் நடத்துகிறார்கள். எஸ்.எஸ்.பி கட்சியைச் சேர்ந்த ஒரு தொழிற் சங்கத் தலைவர் தாக்கப்பட்டு கொலை செய்யப்பட்டது... ஒரு காங்கிரஸ் ஊழியர் படுமோசமாகத்தாக்கப்பட்டார்.

இத்தகைய நடவடிக்கைகளால் பங்களாக் காங்கிரசைச் சார்ந்த சட்டமன்ற உறுப்பினர்களை காங்கிரஸ் கட்சிக்கு இழுத்துச் செல்ல மார்க்சிஸ்ட் கட்சி உதவி புரிந்ததாம். வங்கத்தில் மீண்டும் காங்கிரஸ் ஆட்சியை கொண்டுவர மார்க்சிஸ்டுகள் செய்யும் சதித் திட்டங்களுக்கு அவர்கள் கூறும் உதாரணங்கள் இவை.

கேரோவைக் கண்டித்து சவான் பேசியதெல்லாம் முதலாளிகளை பட்டினி போடுகிறார்கள் என்றுதான். மத்திதர குமாஸ்தாக்களையும் விடவில்லை என்று சவானையும் மிஞ்சி வலதுசாரிகள் நம்மைத் தாக்குகின்றனர் பல ஆண்டுகளாக கேரோ போராட்டம் வங்கத்தில் நடைபெறுவதை மூடிமறைத்து பெருமுதலாளிகளுக்கு வக்காலத்து வாங்குகிறார்கள் இவர்கள்.

எஸ். எஸ். பி, ஊழியர் கொல்லப்பட்ட நிகழ்ச்சியோடு நம்மை இணைத்துப் பேசுகின்றனர். இது பச்சைப் பொய். வங்க அரசை கவிழ்க்க மத்திய அரசும் பெருமுதலாளிகளும் நம்மீது அவதூறு மாரி பொழிகின்றனர். இந்த துரோகத்துக்கு துணைபோகின்றனர் வலதுசாரிகள்.

மத்திய அரசும் காங்கிரஸ் கட்சியும் லட்சக்கணக்கில் பணத்தை வாரிவீசி ஐக்கிய முன்னணி ஆட்சியை கவிழ்க்க சட்டமன்ற உறுப்பினர்களை விலைக்கு வாங்குகின்றனர் என்று அஜாய் முகர்ஜி பகிரங்கமாகக் குற்றம் சாட்டுகிறார். ஆனால் வலதுசாரிகள் பிற்போக்காளரின் கூற்றுக்கு ஒத்துப்பாடுகின்றனர்.

கேரளத்திற்குஅரிசி அனுப்ப மறுத்து நெருக்கடியை உண்டாக்குகிறது மத்திய அரசு. உணவில்லாமல் துடிக்கின்ற மக்களை கள்ளமார்க்கெட் கயவர்கள் சூறையாடுகின்றனர். இந்நிலையில் கேரள அரசாங்கம் ஏன் மொத்தக் கொள்முதலை செய்யத் தயங்குகிறது என்று தோழர்சுந்தரய்யா கேட்டால் வலது சாரிகளுக்கு எரிச்சல் ஏற்படுகிறது. கூட்டு மந்திரி சபையின் நடவடிக்கை பற்றி இப்படி பகிரங்கமாக ஒரு கட்சி விமர்சனம் செய்யலாமா என்று வலது சாரிகள் கேட்கின்றனர். திட்டமிட்டு உணவு நெருக்கடியை தீவிரப் படுத்தி கேரள அரசை செயலற்ற தன்மைக்கு இழுத்துச் செல்ல மத்திய அரசு பகிரங்கமாகத் தலையிடும்போது ஒரு தலைப் பட்சமாக உணவு இலாகா அமைச்சர் தோழியர் கௌரியை பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று இவர்கள் மட்டும் பகிரங்கமாக அறிக்கை விடலாம்! ஆனால் மொத்தக் கொள்முதல் செய்யாமல் இருப்பது தவறு என்று சந்தரய்யா வாய் திறக்கக் கூடாது.

(5-ம் பக்கம் பார்க்க)

---

(முதல் பக்கத் தொடர்ச்சி)

நினைத்திருக்க முடியுமே யொழிய துப்பாக்கிச் சனியனால் குத்த நினைத்திருக்க முடியாது.''

இந்தக் கட்டுரை தொடரும் என இந்தியன் எக்ஸ்பிரஸ் அறிவித்துள்ளது.

## குறிப்பு:-

எத்தகைய கொலைகாரச் சதிகளில் உள்துறை அமைச்சர் சவானின் தூண்டுதலின் பேரில் வங்க கவர்னர் தர்மவீராவின் மேற்பார்வையின் கீழ் அஜாய் முக்கர்ஜியின் அனுமதியுடன் இந்தக் கொலை வெறித்தாண்டவம் நக்சல்பாரியில் நடைபெறுகின்றது என்பது குறித்து மேலும் பல விபரங்கள் பின்னர் தரப்படும்.

# வலதுசாரிகளின் தொழிற்சங்க ஜனநாயகம் பாரீர்!

சேலம் ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் காரியதரிசியாக சென்ற 3 வருடங்களுக்கு மேலாக இருப்பவர் திரு. ஜி. சாமுவேல். அவர் ஏ.ஐ.டி.யு.ஸி. ஜெனரல் கவுன்சில் அங்கத்தினரும் கூட.

அந்த சங்கத்தின் சட்டத்தில் ஒரு விநோதமான ஷரத்து உள்ளது. இது எப்போது நுழைக்கப்பட்டது என்பது பல முக்கிய ஊழியர்களுக்கே தெரியவில்லை. மில்வாரி கிளைச் சங்கங்கள் உள்ளன. இந்த கிளைச்சங்கங்களின் அங்கத்தினர்களில் 20 பேருக்கு ஒருவர் வீதம் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள், ஜில்லா சங்க மகாசபைக்கு ஓட்டுரிமை பெற்ற அங்கத்தினர்களாகச் செல்கிறார்கள். ஆனால் ஜில்லா சங்க மகா சபை அங்கததினர்கள், இவர்கள் மட்டுமல்ல. சென்ற வருட ஜில்லா நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களும் கொண்டதுதான், ஜில்லா சங்க மகாசபையாகும்! இப்படி ஒரு விநோதமான ஷரத்து சங்கத் திட்டத்தில் உள்ளது. கோவையில் திருமதி பார்வதி கிருஷ்ணனை தலைவராகக் கொண்டுள்ள வலதுசாரி சங்கத்தின் சட்ட திட்டத்தில் கூட இப்படி ஒரு ஷரத்து இல்லை.

இந்த ஷரத்து எப்படி செயல்படுகிறது பாருங்கள்! ஜில்லாவிலுள்ள கிளைச்சங்கங்கள் அனைத்திலுமுள்ள அங்கத்தினர்களைக் கூட்டினால், சுமார் 1200 பேர்கள் வருவாரகள். 20 பேருக்கு ஒருவர் வீதம் 60 பிரதிநிதிகள் தேர்ந்ததெடுக்கப்படுவார்கள். ஜில்லா சங்க நிர்வாகக் கமிட்டியில் 22 பேர்கள் இருக்கிறார்கள். ஆக 60ம் 22ம் 82 பேர் கொண்ட ஜில்லா சங்க மகா சபையாகும். 22 பேர் கொண்ட ஜில்லா நிர்வாகக் கமிட்டியில், 17, 18 பேர் வரை திரு. சாமுவேலின் சீடர்கள் ஆவார்கள். எனவே, சாமுவேல் கோஷ்டியினருக்கு, மகாசபையில் மெஜாரிட்டி (42 ஓட்டுகள்) கிடைக்க, புதிதாக தேர்ந்தெடுக்கப்படும் 60 பிரதிநிதிகளில் 25 பேர் (மைனாரிட்டியினர்) ஆதரவு கிடைத்தால் போதும் இப்படி சென்ற 2, 3 வருடங்களாக தேர்ந்தெடுக்கப்பட்ட 60 பிரதிநிதிகளில் கம்யூனிஸ்ட் (மார்க்ஸிஸ்ட்) கட்சி ஆதரவாளர்கள் 34 பேரும், சாமுவேல் ஆதரவாளர்கள் 26 பேருமாகயிருந்தனர். ஆனால் அந்த வருடம் பழைய நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களின் எண்ணிக்கை பலத்தை வைத்து தங்களுக்குத்தான் மெஜாரிட்டி என்று சாமுவேல் சாதித்து விட்டார். நம் கட்சித் தோழர்களும் ஆதரவாளர்களும் ஆட்சேபித்து வெளிநடப்புச் செய்தார்கள்.

இந்த வருடம் திரு. சாமுவேல் இந்த 'ஜனநாயக' வரம்பையும் மீறி விட்டார். கிளைச்சங்கம் ஒவ்வொரு அங்கத்தினரிடமும் வருடாந்திர சந்தாவாக 3 ரூபாய் வசூலிக்கிறது. இந்த 3 ரூபாயையும் அப்படியே மத்திய சங்கத்துக்குக் கொடுத்துவிட வேண்டுமென்றும், அப்படியானால் தான் கிளைச்சங்கப் பிரதிநிதிகளை ஜில்லா சங்க மகா சபையில் அனுமதிக்க முடியுமென்றும் ஒரு புது விதியை சாமுவேல் பிரகடனப் படுத்தி விட்டார். சங்க சட்டதிட்டத்தில் கூட அப்படியொன்றுமில்லை.

25—6—67 அன்று குமாரபாளையத்தில் நடைபெற்ற ஜில்லா சங்க மகாசபைக் கூட்டத்தில், சேலம் ராசேந்திரா மில் கிளைச் சங்கத்தின் பிரதிநிதிகள் மொத்தம் 19 பேர்களில் 4 பேரை மட்டும் தான் கலந்து கொள்ள அனுமதிக்க முடியும் என்று கூறி, சங்க சட்டதிட்டத்துக்கு விரோதமாக 15 பிரதிநிதிகளை கலந்துகொள்ள விடாமல் தடுத்து விட்டார்கள். 4 பிரதிநிதிகளை அனுமதிக்கத் தக்க அளவுக்குத்தான் கிளைச்சங்கத்திலிருந்து பணம் வந்தது என்று சாக்குச் சொன்னார். பாக்கியுள்ள 4 பிரதிநிதிகளும் ஆட்சேபனை செய்துவிட்டு வெளி நடப்புச் செய்து விட்டார்கள். இவ்விதமாக, தங்கள் சட்டதிட்டத்தையே புறக்கணித்து, கிளைச் சங்க அங்கத்தினர் சந்தாத்தொகை முழுவவையும் மத்திய சங்கத்துக்கே கொடுத்து விட வேண்டுமென்று சர்வாதிகார உத்தரவு பிறப்பித்து, உண்மையான பிரதிநிதிகளை மகாசபையில் கலந்துகொள்ள விடாமல் தடுத்து விட்டார். மேற்படி மகா சபையில்தான் டி. எஸ். அர்த்தனாரி (வலது) தலைவராகவும் சாமுவேல் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள்.

இந்தத் தேர்தல் செல்லாது என்று ராசேந்திரா மில் கிளைச் சங்கம் ஆட்சேபம் தெரிவித்துள்ளது. ராஜேந்திரா மில் கிளைச் சங்கம் மிகப் பெரும்பான்மையான (மார்க்ஸிஸ்ட்) கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவாளர்களைக் கொண்டது என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விதம் தான் வலதுசாரிகளின் தொழிற்சங்க "ஜனநாயகமும் ஒற்றுமை ஆர்வமும்" செயல்படுகின்றன.

—நமது நிருபர்

## புதிய வெளியீடுகள்!

விவசாய அரங்கில்
நமது பணி 0·25

தொழிற்சங்க அரங்கில்
நமது கடமைகள் 0·50

முன்பணம் அனுப்பிப் பிரதிகளைப் பெற்றுகொள்ளவும்.

—நிர்வாகி
கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்ஸிஸ்ட்)
வெளியீடு

(4ம் பக்கத் தொடர்ச்சி)

மேலும் நக்சல் பாரியை சுட்டிக்காட்டி மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்டுகளின் அதிதீவிர கொள்கையே நக்சல் பாரிக்கு காரணம் என்கின்றனர். சட்டமன்றத்தின் மூலமாக சோஷலிசத்தை கொண்டுவர முடியாது என நிருபிக்கவே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்டுகள் ஐக்கிய முன்னணி அரசாங்கத்தை கவிழ்க்கத் துணைபுரிகின்றனர் என்றும் சொல்கிறார்கள். இந்த அரசுகள் ஐந்தாண்டுகாலம் சிறப்பாக பணியாற்றினால் நமது கொள்கை தவறு என நிரூபிக்கப் பட்டுவிடுமாம்!

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளின் 'அதிதீவிர வாதச் செயல்கள்' இல்லாவிட்டால் ஐந்து ஆண்டுகள் புனிதமான இந்திய அரசியல் சட்டத்தின் கீழ் ஆட்சி நடத்திவிட முடியுமாம்!

1959ல் கேரளாவில் நடந்தது என்ன என்று கேட்காதீர்கள்! 1965ல் உபதேர்தல் நிகழ்ந்தது என்னவென்றுப் கேட்காதீர்கள்! இப்போது காங்கிரஸ் அல்லாத ஒவ்வொரு மாநிலங்களில் நடந்து கொண்டிருப்பது என்னவென்றும் கண்விழித்து பார்க்காதீர்கள்! பாராளுமன்ற ஜனநாயகத்துக்கு உலை வைப்பது இந்தியப் பேரரசும் காங்கிரஸ் கட்சியும் என்பதும் பளிச்செனப் புலப்பட்டுவிடுமல்லவா? ஐயகோ! அவர்களின் மார்க்சியத்தை என்னவென்று உறைப்பது! காரல் மார்க்சும், எங்கெல்சும் லெனினும் கல்லறையிலும் கண்ணீர் வடிப்பர்.

நமது அணிகளுக்கு கண்ணீர் விட்டு உருக்கமான வேண்டுகோளை விடுகின்றனர் வலதுசாரிகள் இந்தியாவை இந்தோனேஷியப் பாதையில் செல்ல அனுமதிக்காமல் தடுக்க நமது அணிகள் வலதுசாரிகளின் அணியின் கீழ் திரள வேண்டுமாம். இந்தோனேஷியாவில் அமெரிக்காவின் தலையீட்டுக்கு பட்டுத்திரை போட்டு மறைத்து கம்யூனிஸ்ட் கட்சியின் அதிதீவிரப் போக்குதான் அந்த நிகழ்ச்சிக்குக் காரணமென வாதாடுகின்றனர் வலதுசாரிகள். எல்லா இடது சாரிகளும் மார்க்சிஸ்ட்டு கட்சியின் தவறான போக்குக் கெதிராக ஒன்றுபடவேண்டுமாம். சவானும் விரும்புவது இதுதான்.

திருத்தல் வாதத்தால் கண்ணிழந்த வலதுசாரிகள் ஏகபோக முதலாளிகளின் காவல்காரர்களாக பணிபுரியும் காங்கிரஸ் கட்சியையும் அதன் நடவடிக்கைகளையும் மறந்தே செயல்படுகின்றனர். தேர்தலுக்குப் பிறகு அமைந்துள்ள காங்கிரசல்லாத அமைச்சரவைகளைக் கவிழ்க்க டெல்லி செய்யும் சூழ்ச்சியை மறந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளுக்கெதிரான ஐக்கிய முன்னணிக்கு பாடுகின்றனர் வலதுசாரிகள். சீன எதிர்ப்பில் கண்ணவிந்து போன வலது சாரிகள் ஏகாதிபத்தியம் நமது நாட்டில் புரியும் சூழ்ச்சிகளையும் பார்க்க மறுக்கின்றனர்.

திருத்தல் வாதிகளிடமிருந்து இதைத் தவிர வேறு எதை நாம் எதிர்பார்க்க இயலும்!

# தமிழகமெங்கும் வியட்நாம் ஆதரவு ஆர்பாட்டங்கள்!

## ஜான்சன் கொடும்பாவி கொளுத்தப்பட்டது!

### பழனியில்

பழனியில் 20—7—67இல் வியட்நாம் தினம் கொண்டாடப்பட்டது. நூற்றுக்கணக்கான கட்சித் தோழர்களும் பஞ்சாலைத் தொழிலாளரும் விவசாயிகளும் ஊர்வலமாக அணிவகுத்துச் சென்றனர். ஊர்வலத்தில் மனித வர்க்கத்தின் கொடும் பகைவன் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் தலைவர் ஜான்சனின் கொடும்பாவி கொளுத்தப்பட்டது. இரவு 7 மணிக்கு பழநி தேரடியில் தோழர் ச. பி. வேலுமணி தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் என். ஆர். பழனிச்சாமி, ஏ. சிலுவைசாமி, வி, ஏ. கருப்புசாமி ஆகியோர் அமெரிக்காவின் வெறித்தனமான ஆக்கிரமிப்பைக் கண்டித்து வீர முழக்கச் செய்தனர்.

### பெரியகுளம்

பெரியகுளத்தில் வியட்நாம் விடுதலைப் போராட்ட ஆதரவு தினம் தோழர் அப்துல் ரஹ்மான் தலைமையில் நடைபெறறது. அமெரிக்க ஆக்கிரமிப்பைக் கண்டித்து தோழர் ஆர்.சுப்பையா பி. ஏ. பி. எல். தோழர் கண்ணுச்சாமி (தி. மு. க.) தோழர் ஏஸ். ஏ. ரசாக் ஆகியோர் பேசினர்.

### திருவாரூரில்

திருவாரூர் நகரத்தில் நூற்றுக்கணக்கான தொழிலாளர் விவசாயிகள் கொண்ட ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன. வியட்நாமில் அமெரிக்காவின் ராட்சதத் தாககுதலையும் இந்திய சர்க்காரின் துரோகம போக்கையும் கண்டித்து தோழர்கள் கே. பாரதிமோகன், எம். எல். ஏ., எஸ். கணேசன், பி. நாகரசாசன், எம், நடராசன், வி. கண்ணப்பன் ஆகியோர் பேசினார்கள்.

### சிவகாசி

20—7—67 அன்று சிவகாசி நகராட்சிப் பூங்காத்திடலில் தோழர் கே. தாமோதரன் தலைமையில் வியட்நாம் தினம் பொதுக் கூட்டம் நடைபெற்றறு. தோழர்கள் எஸ். கே. குருசாமி, தொண்டர், எஸ். துரைசாமி, தூத்துக்குடி எ. கே. ராஜா, சாத்தூர், சி. செல்லச்சாமி, எஸ். கே. பழனிச்சாமி ஆகியோர் வியட்நாபில் அமெரிக்கா புரிந்து வரும் அட்டூழியங்களைக் கண்டித்து உரையாற்றினர் அமெரிக்க ஆக்கிரமிப்பைக் கண்டித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### நாகையில்

20—7—67 நாகை நகரத்தில் நூற்றுக்கணக்கான தொழிலாளரும், விவசாயிகளும் கலந்துகொண்டு வியட்நாமில் அமெரிக்கா நடத்தி வரும் ரத்த வெறி பிடித்த யுத்தத்தை எதிர்த்தும், இந்திய அரசின் துரோகப் போக்கை அம்பலப்படுத்தியும் உணர்ச்சி மிக்கதோர் ஊர்வலத்தையும் உற்சாகமிக்கதோர் கூட்டத்தையும் நடத்தினர். கூட்டத்தில் தோழர்கள் எம். ஜீவாராமன், வி. ஆஸாத், பி. வெங்கிடாசலம், பி. காளிமுத்து, சந்திரன், சின்னத் தம்பி, ஏ.ஜி. கஸ்தூரி ரங்கன் ஆகியோர் பேசினர்.

—ஃ—

## விற்பனையாளரின் உடனடி கவனத்திற்கு!

ஜூன் மாத பில் தொகையை ஆகஸ்ட் 7ந் தேதிக்குள் அனுப்பாதவர்களுக்கு பத்திரிகை நிறுத்தப்படும்.

நிர்வாகி
தீக்கதிர்

# சட்டம் ஒழுங்கு எனப் பேசுவதெல்லாம்

# மக்களை ஒடுக்குவதற்காகவே!

# முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் பாதுகாக்கவே!

## நாடாளுமன்றத்தில் பி. ராமமூர்த்தி முழக்கம்!

[காங்கிரஸ் அரசின் போலீஸ் கொள்கையை கண்டித்து தோழர் ராமமூர்த்தி புள்ளி விவரத்துடன் முழக்கமிட்டது வருமாறு:]

உள்துறை அமைச்சரகத்தின் கோரிக்கைகளைப் பற்றிப் பேசும்போது இந்த நாட்டின் சட்டம் ஒழுங்கு பற்றிய பிரச்சினையின்மீதான இரண்டு அணுகும் முறைகளைக் குறிப்பிட விரும்புகிறேன். காங்கிரஸ் ஆட்சிக்கு வந்த பிறகு அனுசரித்து வரும் அணுகும் முறை ஒன்று. இந்த அணுகும் முறை புதியதல்ல. பிரிட்டிஷ் ஆட்சியாளர்களால் இந்த அணுகும் முறை நமக்கு அறிமுகப்படுத்தப்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் அனுசரித்த முறை என்ன? இந்திய மக்கள் அனைவரையும் எதிரிகளாக பாவிப்பதாகும். ஒரு அந்நிய ஆட்சி என்ற முறையில் அவர்கள் இவ்வாறு பாவித்தனர். சுதந்திரம் பெற்ற பின்னர் இந்த நிலை முற்றிலும் மாறும் என மக்கள் எதிர்பார்த்தனர். துரதிர்ஷ்டவசமாக நிலைமை மாறவில்லை. ஒரே ஒரு சிறு மாற்றம் மட்டும் ஏற்பட்டது. புதிய சுதந்திர ஆட்சியாளர்கள் இந்திய மக்கள் அனைவரையும் எதிரிகளாகக் கருதவில்லை. பெரு முதலாளிகளும் பெருநிலப் பிரபுக்களும் பாதுகாக்கப்பட வேண்டிய பகுதியினராக ஆட்சியினரால் கருதப்பட்டனர். போஷிக்கப்பட்டனர். மக்களின் பிற பகுதியினர் எதிரிகளாக பாவிக்கப்பட்டனர். சட்டம் ஒழுங்கு பிரச்சினையை அணுகுவதில் காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்கும் பிரிட்டிஷ் ஆட்சியாளருக்கும் உள்ள வித்தியாசம் இது ஒன்றுதான்.



### சுதந்திரம் இதுதான்!

கடந்த இருபது ஆண்டுகளில் மக்களின் பிரச்சினை ஒன்றுகூட தீர்க்கப்படவில்லை. நிலமற்ற மக்கள் சுதந்திரத்திற்குப் பிறகு நிலம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தனர். சுதந்திரம் கிடைத்த பிறகு 20 ஆண்டுகளில் உள்ள நிலைமைதான் என்ன? நூற்றுக்கணக்கான ஆயிரக் கணக்கான விவசாயிகள் நிலங்களை இழந்து வருகின்றனர். நில வெளியேற்றம் தீவிரமாக நடத்தப்படுகிறது. அவர்களுக்கு கிடைத்த சுதந்திரம் இதுதான்.

### விநோதமான அனுதாபம்!

நமது உள்துறை அமைச்சர் நமது நாட்டில் எண்ணற்ற மக்கள் பிரச்சினைகள் இருப்பதாகவும் அவற்றுக்குத் தாம் ஏராளமாக அனுதாபம் தெரிவிப்பதாகவும் சொன்னார். டன் டன்னாக அனுதாபம் இருக்கக்கூடும். ஆனால் விவசாயிகள் தங்கள் உரிமைகளுக்காக போராடும்போது அனுதாபம் அங்கு வராது. சட்டம் ஒழுங்கு பிரச்சினைதான் வரும். போலீஸ் அனுப்பப்படும். தடியடிகள் தாராளமாக நடைபெறும். பலர் சிறைப்படுத்தப்படுவர். துப்பாக்கிப் பிரயோகமும் நடைபெறும். பலர் கொல்லப்படுவர். இதுதான் கடந்த இருபது ஆண்டுகளாக நடைபெற்று வருவது.

இங்கே இருக்கிற எமது கட்சித் தோழரான கே. ரமணி 1948-49ல் தடுப்புக் காவல் சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டார். அவரைக் கைது செய்ததற்கு அந்த உத்தரவில் அடிப்படையாகக் கூறப்பட்ட காரணம் என்ன தெரியுமா? ஒரு குறிப்பிட்ட இடத்தில் அரசாங்கப் படிகளைத்தான் பயன்படுத்தப்பட வேண்டும். நிலப்பிரபுக்களின் அளக்கும் படிகளை அல்ல என்று வற்புறுத்தி விவசாயிகளை அவர் தூண்டிவிட்டார் என்பதாகும். அரசாங்கப் படிகளை உபயோகிக்க வேண்டும் என்று வற்புறுத்தியதற்காக அவர் சிறையிலடைக்கப்பட்டார். இதுநாள் வரை நடந்து வருவது இதுதான்.

### சட்டமும் ஒழுங்குப் பிரச்சினையும் காங்கிரசின் உள்ளடக்கமும்!

நான் ஒன்றை மட்டும் கேட்க விரும்புகிறேன். இந்த நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்ட உள்ள இயந்திரம் ஒருமுறையேனும் பணக்காரர்களுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் எதிராகப் பயன்படுத்தப்பட்டதா? அல்லது நிலப்பிரபுக்கள் எல்லோரும் அப்பழுக்கில்லாத தேவதைகள் என்றும் விவசாயிகளும் விவசாயத் தொழிலாளரும்தான் இந்த நாட்டின் சட்டத்தையும் ஒழுங்கையும் குலைப்பவர்கள் என்றும் நாங்கள் நம்ப வேண்டுமா? இந்த நாட்டின் பெருங்கொள்ளைக்காரர்கள், பெரு முதலாளிகள், கள்ளமார்க்கெட்காரர்கள், ஆகியோருக்கு எதிராக சட்டம் அமைதிப் பிரச்சினை என்பது பயன்படாதா? சட்டமும்ஒழுங்கும் என்ற பிரச்சினைக்கு நீங்கள் கொண்டுள்ள கருத்தின் உள்ளடக்கம் இதுதான். தொழிலாளர் வேலைநிறுத்தம் செய்தால் உடனே போலீஸ் அனுப்பப்பட்டு அவர்கள் அடிக்கப்படுவார்கள். கடந்த 20 ஆண்டுகளில் ஒவ்வொரு பிரச்சினையிலும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் அனுசரித்த கொள்கை இதுதானே!

### மொழிவாரி மாநிலப் பிரச்சினையில்!

மொழிவாரி மாநிலப் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். மொழிவாரி மாநிலங்களை காங்கிரஸ் ஆட்சியாளர் முறையாக அமைப்பதற்கு முன்னர் இதற்காக எவ்வளவு ரத்தம் சிந்தப்பட்டது? மக்கள் மொழிவாரி மாநில அமைப்புக்காகப் போராடினர். உடனே சட்டம் ஒழுங்கு பிரச்சினை முன் வந்தது. ஆம்! மொழிவாரி மாநில அமைப்பை காங்கிரஸ் ஏற்படுத்துவதற்கு முன்னர் நூற்றுக்கணக்கான மக்கள் ரத்தம் சிந்தினர். இன்னொரு பிரச்சினை மொழிப் பிரச்சினை தமிழகத்தில் காங்கிரஸ் அரசாங்கத்தினால் மிருகத்தனமான அடக்குமுறை கட்டவிழ்த்துவிடப்பட்டது. 1965ல் நூற்றுக்கணக்கான மக்கள் தமிழகத்தில் சுட்டுக்கொல்லப்பட்டனர். சட்டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்டிய முறை இதுதான் நூற்றுக்கணக்கான மாணவமணிகள் சுட்டுக்கொல்லப்பட்டனர். அந்த மாணவர்கள் கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டிருந்தபோது நானும் அங்குதானிருந்தேன். அவர்கள் எவ்வாறு அங்கு கொடுமைப்படுத்தப்பட்டார்கள் என்பதை நான் அறிவேன். ராணுவம் உள்ளிட்டு எல்லாமே இவர்களை அடக்க கொண்டு செல்லப்பட்டது. இவ்வளவு ரத்தம் சிந்திய பின்னர்தான் தங்கள் மொழிக் கொள்கையில் ஏதோ தவறு இருப்பதாகவும் ஏதாவது செய்தாக வேண்டும் என்றும் அவர்கள் உணர்ந்தார்கள். ஆனால் இன்னும்கூட மத்திய அரசாங்கம் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் கொடுத்த அந்த வாக்குறுதிப்படி மசோதாவைக் கொண்டுவர முன்வரவில்லை. மக்களின் விருப்பங்களை நிறைவேற்றும் முறை இதுதான் போலும்!

### பூர்வகுடி மக்களின் பிரச்சினை!

பூர்வகுடி மக்களின் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். பூர்வகுடி மக்கள் விஷயத்தில் இவர்கள் அனுசரித்து வரும் கொள்கை அனைத்தும் அவர்களிடையே அமைதியின்மையை உண்டாக்கி வருகிறது. நாகர்கள் பிரச்சினையை தோற்றுவித்ததும் இவர்களே! மிசோக்களின் பிரச்சினையைத் தோற்றுவித்ததும் இவர்களே! பூர்வகுடி மக்கள் வாழுகிற பகுதிகள் அனைத்திலும் இன்று அமைதியின்மை தலைவிரித்து ஆடுகிறது. கடந்த ஆண்டு பஸ்தாரில் நடந்தது என்ன? பூர்வகுடி மக்களின் நலன்களைப் பேணும் பொருட்டு அரசியல் அமைப்புச் சட்டம் சில விசேஷப் பொறுப்புகளை அரசினர் மீது சுமத்தியுள்ளது. அரசாங்கம் அந்த விசேஷப் பொறுப்புகளை நிறைவேற்றியதா? பூர்வகுடி மக்கள் முதலாளிகளுக்கு மலிவான உழைப்புக்கான மூலாதாரம். பனியாக்களின் சுரண்டலுக்கான தளம். இதுதானே அரசாங்கம் பூர்வகுடி மக்கள் விஷயத்தில் காட்டும் மனோபாவம். இதன் விளைவாகத்தான் இன்று அங்கெல்லாம் பிரும்மாண்டமான எழுச்சிகள் தோன்றியுள்ளன. இது இயற்கையானதே. பூர்வகுடியினரின் நிலங்கள் பாதுகாக்கப்பட வேண்டுமென்று சட்டத்தில் சொல்லப்பட்டும் பாதுகாக்கப்படவில்லை. பூர்வகுடியினரின் நிலத்தை பூர்வகுடியினர் அல்லாதவர்களுக்கு விற்பனை செய்வதை தடுப்பதின் மூலம் இதைச் செய்திருக்க முடியும். உதாரணத்திற்கு திரிபுராவை எடுத்துக் கொள்வோம். 1965ல்காலஞ்சென்ற உள்துறை அமைச்சர் கோவிந்த வல்லப் பந்த் ஒரு அறிக்கையில் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து திரிபுராவிற்கு அகதிகளை அனுப்பும் நிலை ஒரு உச்சவரம்பை எட்டி விட்டது. இன்றும் அதிகமான அகதிகளை அங்கு அனுப்ப இயலாது. இன்றும் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வரும் அகதிகள் நிலம் அதிகமாக உள்ள மத்தியப் பிரதேசம் போன்ற மாநிலங்களுக்கு அனுப்பப்பட வேண்டும் என்று குறிப்பிட்டார். ஆனால் அதற்குப் பின்னர் கடந்த 10 ஆண்டுகளில் பத்து லட்சம் அகதிகள் அங்கு அனுப்பப்பட்டுள்ளனர். இப்போது திரிபுராவில் கிராமம் கிராமமாக நான் சொல்ல முடியும். பட்டியலே என்னிடம் இருக்கிறது. முன்பு பூர்வகுடி மக்களிடம் இருந்த கிராமங்கள் இப்போது பூர்வகுடி மக்கள் அல்லாதோரின் ஆதிக்கத்தில் உள்ளன.

### உலகை இழந்தனர்!

இவ்வாறு நிகழாகாமல்தடுக்கத்தான் அரசியல் அமைப்புச் சட்டத்தில் விசேஷ விதிகள் இருக்கின்றன. இதைச் செய்ய முடியாது தடுத்தது எது? இதற்கென்றே தேபர் தலைமையில் கமிஷன் ஒன்றிருந்தது. அவர் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவா அல்ல. அவர் காங்கிரஸ்காரர். அந்த கமிஷன் இந்தப் பிரச்சினையை முற்றாக ஆராய்ந்து ஏழு ஆண்டுகளுக்கு முன்னால் திரிபுரா முழுவதும் பூாவ குடியினரின் பிரதேசம் என்ற சட்ட ரீதியாகப் பிரகடனம் செய்ய

(7ம் பக்கம் பார்க்க)

### 6000 டெக்ஸ்டூல் தொழிலாளர் பாதிப்பு!

டெக்ஸ்டூல் கம்பெனி கதவடைப்புக்குப்பின் திறக்கப்பட்ட பின்னரும் சம்பள பாக்கி, போனஸ் பாக்கி, கோ—ஆப்ரேட்டிவ் ஸ்டோருக்கு தொழிலாளர்களிடம் பிடிக்கப்பட்ட பணம் ஆகியவற்றை முறையாக கொடுக்கவில்லை. ஜூன் மாத சம்பளம் கொடுக்கப்படவில்லை. லேஆப் விடப்பட்டு வருகிறது. 6000 தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். மத்திய சர்க்காரின் புதிய வரி விதிப்பால் ''கோண்வொயின்டிங்'' யாரும் வாங்குவதில்லை இதனால் ஆட்குறைப்புச் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது என்றும், தொழிலாளருக்கு நஷ்ட ஈடு கொடுக்க பணம் இல்லை என்றும் சொல்லப்படுகிறது. இதனால் 6000 பேர்களுக்கு வேலையும் வருமானமும் இல்லாத நிலை ஏற்படக்கூடும் என அஞ்சப்படுகிறது.

எனவே இந்த தொழிற்சாலை விஷயத்தில் தமிழக அரசு உடன் தலையிட்டு தொழிலாளர் வாழ்வை பாதுகாத்து தொழிற்சாலையைதொடர்ந்து நடத்தவும், ஏற்படவிருக்கும் நெருக்கடியை தவிர்க்கவும் கோரி டெக்ஸ்டூல் கம்பெனி தொழிலாளர் சார்பில் மகஜர் ஒன்றை பொதுச் செயலாளர் தோழர் டி. பாலன் தமிழக முதலமைச்சர், தொழிலமைச்சர் சட்டமன்ற உறுப்பினர் தோழர் எம். பூபதி ஆகியோருக்கு 5-7-67 அன்று அனுப்பியுள்ளார்.

# மக்கள் விரோதக் கொள்கைகள் நீடிக்கும்வரை அமைதி ஏற்படாது!

(6ம் பக்கத் தொடர்ச்சி)

வேண்டும் என்றும் பூர்வகுடி மக்களிடமிருந்து நிலத்தை மாற்றுவது தடுக்கப்படவேண்டும் என்றும் சிபாரிசு செய்தது. இந்த சிபாரிசுக்குப் பின்னர் இதுநாள் வரை அரசாங்கம் செய்ததுதான் என்ன? இதற்கு மாருக அங்குள்ள மாநில அரசு பூர்வ குடியினரின் நிலத்தை பூர்வ குடியினரல்லாத மக்களுக்கு மாற்றும் வேலையில் தீவிரமாக ஈடுபட்டுள்ளது. ஆம்! பூர்வகுடி மக்கள் தங்கள் உலகை இழந்துவிட்டார்கள். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவிற்கு வந்த பிறகு பிரிட்டானிய நாகரிகம் நம்மை ஆட்கொள்ள முயன்றபோது மார்க்ஸ் சொன்னதாவது :

## மார்க்சின் மணிமொழி

"இந்திய மக்கள் தங்கள் பழைய உலகை இழந்துவிட்டார்கள். அதற்கு பதில் அவர்களுக்கு ஒரு புதிய உலகமும் கிடைக்கவில்லை" என்ருர். அதைப் போலவே பூர்வகுடி மக்கள் பூர்வீக நிலத்தை பறிகொடுத்து விட்டார்கள். அவர்களுக்கு மாற்ருக கிடைத்தது என்ன? இப்போது அவர்களிடம் கொஞ்சமும் நிலம் கிடையாது. இருந்த அற்ப நிலத்தையும் பறித்தாகி விட்டது. அவர்களுக்கு வேறு வழியில்லாததால காட்டுப் பகுதியில் உள்ள நிலங்களை எடுத்துக் கொள்கின்றனர். உடனே "இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள் ஒரு நக்சல்பாரியை ஒரு சீனததை ஏற்படுத்தி அந்த பிரதேசத்தை விடுவிக்க விரும்புகின்றனர்" என்றெல்லாம் குரலெழுப்புகின்றனர் பூர்வகுடி மக்களது எதிரிகள். இது திரிபுராவிற்கு மட்டும் உரிய பிரச்சினை மட்டுமல்ல. கேரளத்திலும் இந்த பிரச்சினை உளளது. கேரளத்திலுள்ள காடடு நிலங்களும, ஒதுக்கப்பட்ட காட்டு நிலங்களும் நூற்றுக்கணக்கான ஏகர்கள் எங்களால் மட்டுமல்ல, காங்கிரஸ்காரர்களாலும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. உதாரணத்திற்கு தமிழகத்தில் கடலமாங்குடியில் காடடு இலாகா நிலத்தை ஆக்கிரமிப்புச் செய்துள்ள 15000 விவசாயக் குடும்பங்களை நிலத்தைவிட்டு வெளியேறுமாறு காட்டிலாகா அதிகாரி உத்தரவிட்டார். நாங்கள் உடனே விவசாயத்துறை காட்டிலாகா அமைச்சருடன் தொடர்பு கொண்டு அவரை அங்கு அழைத்துச் சென்ருேம். அவர் உடனே உத்தரவை ரத்துசெய்து "இந்த நிலங்களை விவசாயிகளுக்கு மாற்றி தருகிறேன். அவர்களது கோரிக்கை நியாயமானது" என்ருர். இது ஒருவகை கண்ணோட்டமாகும.

## பூர்வ குடியினரின் நிலத்தைப் பறிக்காதே!

இன்னெரு கண்ணேட்டம் பூர்வகுடியினரின் நிலத்தை பறித்துக் கொள்வது. அவர்கள் காட்டு இலாகா நிலத்தை எடுத்துக்கொண்டால் "இது ஒரு விடுதலை இயக்கம். இடதுசாரி கம்யூனிஸ்டுகள் இதை நடத்துகின்றனர்" என்று கதை விடுவது. எனவே சீனவுடன் போரிடுவதற்குதான் இவ்வாறு பூர்வ குடியினரின் நிலத்தை பறித்துக்கொள்கிறீர்களோ? சீனத்துடன் நடத்தும் ஒரு விசித்திரமான யுத்தமாகத்தான் இது இருக்கும். (குறுக்கீடுகள்) எங்களது கோரிக்கை என்னவென்ருல் இந்த நிலங்களை ஏழை விவசாயிகளுக்கு சாதாரண மக்களுக்குகொடுத்துவிட வேண்டும் என்பதுதான். தேவர் கமிஷன் சிபாரிசை ஒப்புக்கொண்டு இதை பூர்வகுடி மக்கள் பிரதேசமெனப் பிரகடனப்படுத்த வேண்டும் என்பதுதான். அரசாங்கம் இதைச் செய்யாது. சட்டமும் ஒழுங்குப் பிரச்சினையைப்பிரயோகித்து போலீசை ஏவும். தடியடியும் துப்பாக்கி சூடும் நடக்கும். இதுதாஞ உங்களிடம் இருப்பதாகச் சொல்லிக் கொள்ளும் அனுதாபம்!

## ஷேக் அப்துல்லாவை விடுதலை செய்க!

இதைப் போன்ற பல உதாரணங்களை என்ஞல் சொல்ல முடியும். காஷ்மீர் பிரச்சினை அப்படியே இருக்கிறது. எந்த விசாரணையுமின்றி ஷேக் அப்துல்லா 15 ஆண்டுகளாகப் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கிருர். விசாரணையின்றி ஒருவரை பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் சிறையில் வைத்துவிட்டு "அந்த நபர் வெளியில் இருந்தால் பிரச்சினையை தீர்க்க முடியாது" என்று சொல்லுவதை என்ஞல் புரிந்துகொள்ள முடியவில்லை. பதினைந்து ஆண்டுகள் சிறையில் வைத்திருந்தனர். ஐந்து ஆறு ஆண்டுகள் விசாரணை நடந்தது. அதுவும் ரகசியமான விசாரணை நடந்தது. பலன் என்ன? சட்டமும் ஒழுங்கும் தெரிந்த ஒரு காங்கிரஸ் கனவானுக்கு அரசாங்க பணம் போய் சேர்ந்தது. அவ்வளவுதான்! வழக்கில் எதுவும் வெளியாகவில்லை. இன்னும் ஷேக் அப்துல்லா சிறையில் வைக்கப்பட்டுளளார். காஷ்மீர் மக்களுக்கு நாம் செய்தது என்ன? காஷ்மீர் மக்களுக்கு பக்ஷிகுலாம் அகமதின் நிர்வாகத்தை தந்தீர்கள். செய்தித் தாள்கள் ஐயங்கார் கமிஷனை கோடிட்டுக் காட்டி செய்திகளை வெளியிட்டன. அதன்படி பக்ஷிகுலாம் அரசாங்க அதிகாரத்தை தனக்காகவும் தனது குடும்பத்தினர் நலனுக்காகவும் பயன்படுத்திக் கொண்டார் என குறிப்பிட்டிருந்தன. இந்த வழக்கில் இன்னும் எத்தனை பேருடன் பேரம் பேசப்பட்டு வருகிறது என்பதை நான் அறியேன். இந்த வழக்கில் நீதிபதி ஐயங்கார் மீது வழக்குத் தொடுக்கப்படுமாம். அதுபற்றி நான் கவலைப்படவில்லை. இத்தகைய ஒரு ஆட்சியைகாஷ்மீர மக்களுக்கு தந்த பிறகு நீங்கள் அந்த மக்களிடம் நன்றியை எதிர்பார்க்கிறீர்களா? அதுவும் விசாரணை இன்றி 15 ஆண்டுகளாக அந்த மனிதரை சிறையிலடைத்துள்ளீர்கள். இவைகள் உலகில் நமக்கு எங்குமே நல்ல பெயரைத் தரப்போவதில்லை. நமது பதிலைக் கேட்டு உலகில் யாரும் திருப்தியடையமாட்டார்கள்!

## டெல்லியில் வெளியான பிரசுரம்!

என்னிடம் டெல்லியில் வினியோகிக்கப்பட்ட ஒரு பிரசுரம் உள்ளது. இதனுடைய அதிகார பூர்வமான தன்மை குறித்து எனக்கு எதுவும் தெரியாது. காந்தி பவுண்டேஷன் உறுப்பினர்களான ஸுடஷி, இ. பி. மேனன் ஆகியோரால் வெளியிடப்பட்டதாக இந்த அறிக்கை கருதப்படுகிறது. அதன் ஒரு பகுதியை நான் படிக்கிறேன்.

"1965 மார்ச் 7ம் தேதிக்குப் பிறகு, ஷேக் அப்துல்லா இந்தியாவிற்கு வெளியில் இருந்தபோது பல அரசியல் ஊழியர்களைக் கைது செய்ததைத் தொடர்ந்தும் டெல்லியில் 1965 மே 8ல் ஷேக் அப்துல்லா கைது செய்யப்பட்ட பின்னரும் போலீஸ்காரர்களில் சிலர்..."

"இரவில் போலீசார் சில கிராமங்களில் புகுந்தனர். படுக்கையிலிருந்து ஆண்களையும் பெண்களையும் இழுத்து வந்தனர். வசைமாரி பொழிந்தனர். நன்ருக உதைத்தனர். ஜன்னல்களையும் கதவுகளையும் உடைத்து சொத்துக்களை கொள்ளையிட்டனர்."

## தூதுக்குழு வெளியிட்ட உண்மைகள்!

இவை எல்லாம் மக்களை அச்சுறுத்துவதற்காக செய்யப்பட்டன. இந்தச் செய்திகள் இந்தியாவிலுள்ள சர்வோதய தலைவர்களின் காதுக்கு எட்டியது. இரண்டு உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்த பெண்களைக் கொண்ட நடுநிலையான தூதுக் குழுவை காஷமீரத்திற்கு சர்வோதயத் தலைவர்கள் அனுப்பி வைத்தனர். இந்த கிராமங்களுக்கு நேரில் சென்று பெண்களை நேரில் கண்டு உண்மைகளைச் சேகரிக்க இந்த இரண்டு பெண்களும் 1965 ஜுலை மாதத்தில் காஷ்மீரம் சென்றனர். அவர்கள் உண்மைகளைச் சேகரித்து அப்போதைக்கப்போது கேள்விப்பட்ட விஷயங்களை சர்வோதயத் தலைவர்களுக்கு அனுப்பி வைத்தனர். படிப்பதற்கே மிகவும் துன்பம் தரக் கூடிய அவர்களது அறிக்கையின் சில பகுதிகளை நான் படித்துக்காட்ட விரும்புகிறேன்.

தங்களது நீண்ட அறிக்கையின் இறுதியில் அவர்கள் குறிப்பிடுவதாவது :

## வெறித்தனம்!

"இறுதியாக நாங்கள் கருதுவது யாதெனில் நிகழ்ச்சிகளைக் கண்ணுறும்போது இந்த வெறித்தனமான கால முழுவதிலும் மக்களை, மொத்தமாக, குறிப்பாக அவர்களின் பெண்டிர் மீது பழி வாங்குவதையும், அச்சுறுத்துவதையும் நோக்கமாகக் கொண்டு செயல்பட்டுள்ளனர்". இந்த நிகழ்ச்சிகளுக்கு பத்திரிகைகள் முழுமையாக இரும்புத்திரையிட்டுவிட்டன. சில செய்திகளை சீர்குலைத்து வெளியிட்டன."

## இந்தியாவே காரணம்!

"பல இடங்களில் பெண்கள் இவற்றுக்கெல்லாம் இந்தியா தான் காரணம் என்று எங்களிடம் சொன்னபோது எங்களுக்கு ஏற்பட்ட வெட்கத்தையும் துயரத்தையும் நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள்".

## நடவடிக்கை எடுப்பீர்களா?

இந்த அறிக்கை சர்வோதயத் தலைவர்கள் மூலம் பிரதம மந்திரிக்கும் உள்துறை அமைச்சருக்கும் அனுப்பப்பட்டதாக அவர்கள் சொல்கிருர்கள். அவர்கள் இதை வெளியிட விரும்பவில்லை. நான் கேட்கிறேன். மத்திய அரசு சட்டத்தையும் ஒழுங்கையும் பற்றிப் பேசுவதில் நேர்மை உண்டா எனக் கேட்கிறேன். நமக்கு முன்ஞல் பகிரங்கமான சான்று உளளது. கிராமத்தினர் உதைக்கப்படவில்லையா? அச்சுறுத்தப்படவில்லையா? இந்த அறிக்கையை சபையின் முன் வையுங்கள். இந்த அறிக்கைதான் உலகம் முழுவதும் வினியோகிக்கப்படுகிறதே! இதைப் படித்து வெளிநாட்டு மக்கள் நம் நாட்டைப் பற்றி என்ன நினைப்பார்கள்? மக்களைத் துன்புறுத்தி, போலீஸ் அரசை போன்ற நிலையை உருவாக்கியவர்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?

## போலீஸ் விசாரணை!

போலீஸ் விசாரணைப் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். இதற்குள்ள ஜனநாயக சட்டபூர்வ அடிப்படைதான் என்ன? என்னிடம் இதற்குப் பல சான்றுகள் இருக்கின்றன. அரசாங்க சர்வீஸ் கமிஷன் தேர்வில் தேர்வு பெற்ற ஒருவர் இருக்கிருர், அவர் ஒரு அலுவலகத்தில் வேலைக்கு அமர்த்தப்பட்டார். மூன்று மாதத்திற்குள் அவரது கிராமத்திற்கு சென்று விசாரணை செய்து விரும்பத்தகாத நபர் என்று எழுதி அனுப்பிய ரிப்போர்ட் வந்து சேர்ந்தது. விரும்பத்தகாத நபர் என்று வரையறுப்பதற்கான இலக்கணங்கள்தான் என்ன? தம் வாழ்நாளில் எப்போதோ ஒரு கட்சியுடன் தொடர்புகொண்டிருந்தார் என்பதற்காக அவர் விரும்பத்தகாதவரா? இந்த அடிப்படையில் அவருக்கு வேலை மறுக்கப்படுகிறது. இது நாள் வரை நடைபெற்றது இதுதானே! இத்தகைய விளையாட்டில் யார் வேண்டுமானுலும் ஈடுபடலாம். ஆனுல் கேரளத்தில் நாங்கள் ஆட்சிப் பொறுப்பில் இருப்பதால் இதைப்போலச் செய்யவில்லை.

## கேரளத்திலும்வங்கத்திலும் நாங்கள் செய்தோமா?

வங்கத்தில் பல்வேறு கட்சிகளில் நாங்களும் ஒரு கட்சி அவ்வளவுதான். கேரளத்தில் காங்கிரசுடன் தொடர்பு கொண்டுள்ள எல்லோரும் விரும்பத்தகாதவராக கருதப்பட்டு வேலை மறுக்கப்படவேண்டுமென நாங்கள் சொல்லவில்லை. சில ஜனநாயகக் கோட்பாடுகளாவது இருக்க வேண்டாமா? அரசியல் அமைப்புச் சட்டத்தின் கீழ் இயங்க அனுமதிக்கப்பட்டுள்ள ஒரு அரசியல் கட்சியை சாதாரணமக்கள் அருவறுத்து வெறுக்க வேண்டுமென அரசியல் அமைப்புச் சட்டம் கூறவில்லை. இதுபோன்று மக்கள் அச்சுறுத்தப்பட்டால் இந்த நாட்டில் நிலைபெற்றுள்ளதாக சொல்லப்படும் ஜனநாயகத்தின் தன்மைதான் என்னவோ? இது ஒரு கண்ணேட்டம்.

## பிரச்சினையைத் தீர்க்க வழி அடிப்படையை மாற்றுவதே!

இன்னெரு கண்ணேட்டம் உண்டு. அதாவது ஒரு போராட்டமோ கிளர்ச்சியோ தோன்றுமானுல் அதை ஆராய்ந்தறிந்து அந்த அடிப்படையை மாற்றுவதன் மூலம் பிரச்சினையை தீர்ப்பது. அதாவது பொருளாதார ரீதியில் அதன் அடிப்படையான பிரச்சினையை தீர்ப்பது. இதன் மூலம் போராட்டத்திற்கான அடிப்படையையே மாற்றுவது. இத்தகைய முறையை இப்போது மட்டுமல்ல 1957 கேரளத்தில் அனுசரித்தோம். ஒரு கிளர்ச்சி தோன்றுமானுல் சட்டம் ஒழுங்கின் பெயரால் மக்களை சுட்டுக்கொல்லப் போலீசை அனுப்புவதில்லை. சட்டமும் ஒழுங்கும் என்ற பிரச்சினையில் நாங்கள்கொண்டுள்ள கண்ணேட்டம் இதுவல்ல. இதற்கு மாருனது. நாங்கள் செல்வாக்குப் பெற்றுள்ள மாநிலங்களில் இந்த முறையைதான் அமுலாக்க விரும்புகிருேம்.

மேற்கு வங்கத்தில் நாங்கள் பதவிக்கு வந்ததும் ஒரு பயங்கரமான சூழ்நிலையை எதிர்நோக்க வேண்டிவந்தது. நூற்றுக்கணக்கான தொழிலாளரை ஆட்குறைப்பு செய்யும் சூழ்நிலையை எதிர்க்க வேண்டியிருந்தது. இந்தப் பிரச்சினை எங்களுக்கும் புதிதல்ல. ஏற்

(8ம் பக்கம் பார்க்க)

## நன்கொடை

தோழர் கே. திலகராஜ் திருமதி அருணதேவி ஆகியோரின் திருமணததையொட்டி தீக்கதிர் வளர்ச்சிக்கு நன்கொடை ரூ 5.

# பக்தவத்சலத்திற்கு நேர்ந்த கதி என்ன?

# சவானுக்கு எச்சரிக்கை!

(7ம் பக்கத் தொடர்ச்சி)

கனவே எதிரிட்டிருக்கிறோம். இப்போது சந்திக்க விரும்புகிறோம். மேற்குவங்கம் தொழிற்துறையில் வளர்ந்த பல எஞ்சினியரிங் தொழிற்சாலைகளைக் கொண்ட மாநிலமாகும். இயற்கையாக இங்கு பல கேரோக்கள் நடந்தன.

**கேரோக்கள் புதிதல்ல!**

இந்த கேரோ என்பது புதிதானதல்ல. காங்கிரஸ் பதவியிலிருந்த காலத்திலேயே கேரோக்கள் நடந்துள்ளன. சுதந்திரம் கிடைத்த பின்னர் எந்த ஆண்டிலாவது கேரோக்கள் நடக்கவில்லை என்று நீங்கள் சொல்லமுடியுமா? மேற்குவங்கத்தில் நீண்ட நாட்களாக உள்ள போராட்ட வடிவம் இது முதலாளிகள் தொழிலாளிகள் மீது தாக்குதல் தொடங்கிய நாளிலிருந்து நிலை பெறத் தொடங்கியது. துரதிர்ஷ்ட்ட வசமாக இப்போது முதலாளிகளுக்கு ஏற்பட்டது என்ன தெரியுமா?

முன்பெல்லாம் தொழிலாளிகள் இவ்வித போராட்டத்தில் ஈடுபட்டால் முதலாளிகள் போலீசுக்கு போன் செய்வார்கள். தொழிலாளிகளைவிட சட்டம் ஒழுங்குப் பிரச்சினை முக்கியமல்லவா? எனவே போலீஸ் உடன் வந்து தொழிலாளர்மீது தடியடிப் பிரயோகம் செய்வர். முன்பிலிருந்த அரசாங்கம் அனுசரித்த முறை இதுதான். இந்த பிரச்சினையை வேறு வழியில் சமாளிப்போம் என்றோம். கேரோக்கள் நடந்தால் அமைச்சர்கள் ஸ்தலத்திற்கு செல்வார்கள். இரண்டு தரப்பினருடனும் பேசி உடனடியாக பிரச்சினையை தீர்ப்போம். இந்த மூன்று மாதங்களில் இவ்வாறு எத்தனையோ பிரச்சினைகளை தீர்த்திருக்கிறோம். இதனால் கேரோ போராட்டத்திற்கான அடிப்படையே தகர்கிறது. இதன் விளைவாக கடந்த இரண்டு மாதங்களாக இந்த கேரோக்களைப் பற்றி நீங்கள் அவ்வளவாக கேடக முடியாது. ஆனால் மத்திய அரசாங்கம் செய்தது என்ன? கேரோக்கள் தோன்றிய உடனே உள்துறை அமைச்சர் சொன்னார். இது சட்டம் ஒழுங்கு பற்றிய பிரச்சினையாகும். அரசியல் அமைப்புச் சட்டத்தை மீறும் செயல்கள் அவை', என்றார்.

**பழைய பாணியே!**

இது பழைய பாணிதான். 1957ல் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்கு வந்ததும், காங்கிரஸ் செயலாளர் திரு நாராயண் கேரளத்தில் சட்டமும், அமைதியும் ஸ்தம்பித்துவிட்டதாகச் சொன்னார். காங்கிரஸ்காரர்கள் சத்தியவான்கள். சத்தியமே ஜயத்! அதனால்தான் சட்டமும் அமைதியும் உடைந்துவிட்டதென்றனர். அப்போது காங்கிரஸ் தலைவராயிருந்த தேபர் பின்னல் இதே கோஷத்தை முன் வைத்தார். இந்த பிரச்சினையைத் தீர்க்க அவர்கள் செய்தது என்ன தெரியுமா? தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சியை கவிழ்ப்பதற்காக காங்கிரஸ்காரர்கள் தாங்களாகவே சட்டவிரோதமான இயக்கத்தை நடத்திய தன் மூலம் பிரச்சினையைத் தீர்த்தார்கள். எனவே சட்டத்தைப் பாதுகாக்க அவர்கள் தங்கள் வசம் கொண்டுள்ளது என்ன என்று எங்களுக்குத் தெரியும். மாற்றுக் கட்சியால் நடத்தப்படும் மாற்று ஆட்சி தோன்றினால் உடனே சட்ட ஒழுங்கு பிரச்சினை வந்துவிடும். ஆகையால் அந்த ஆட்சியைக் கவிழ்க்க வேண்டும். எனவேதான் நக்சல்பாரியில் சட்டமும் அமைதியும் குலைந்துவிட்டதாக சொல்கின்றனர். துரதிர்ஷ்ட வசமாக மத்திய ஆட்சிக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் உள்துறை அமைச்சருக்கும் வேறு சம்பவங்கள் எதுவும் கிடைக்கவில்லை. (குறுக்கீடு)

உள்துறை அமைச்சர் சவான் இன்று மூன்று மகாராஷ்டிர நிருபர்களை அழைத்து நக்சல்பாரி போகச் சொல்லியுள்ளார். இன்னும் பத்து தினங்களில் பத்து கதைகள் உங்களுக்கு கிடைக்கும் என்பது நிச்சயம். இதற்கு எவ்வளவு மத்திய அரசாங்கப்பணம் செலவாகப் போகிறது என்பது எனக்குத் தெரியாது. இந்த செலவுப் பணம்தான் தணிக்கையில் வரப்போவதில்லையே.

உள்துறை அமைச்சர் சவான் :

என்மீது சில குற்றச்சாட்டுகளைச் சுமத்தியுள்ளார். நான் எந்தப் பத்திரிகை நிருபரையும் அழைக்கவில்லை என்பதை கூறிக்கொள்ள விரும்புகிறேன் கடந்த மூன்று நாட்களாக நான் டெல்லியில் இல்லை. நான் எந்த விசேஷ நிருபரையும் அழைக்கவில்லை. இந்த நாட்டின் எந்த மூலைக்கு வேண்டுமானாலும் செல்ல பத்திரிகை நிருபர்களுக்கு சுதந்திரம் உண்டு.

ராமமூர்த்தி : எந்த பத்திரிகை நிருபருக்கும் எங்கு வேண்டுமானாலும் போக சுதந்திரம் உண்டு என்பது எனக்குத் தெரியும். ஆனால், மூன்று பத்திரிகை நிருபர்கள் நக்சல்பாரிக்கு குறிப்பிட்ட நோக்கத்திற்காகச் செல்ல உள்துறை அமைச்சரகத்தால் விசேஷமாக உத்திரவிடப்பட்டுள்ளனர்.

இவையெல்லாம் தலையீட்டுக்கான அரசியல் அஸ்திவாரத்தை அமைத்துக்கொள்வதாகும். ஏற்கனவே தலையீடுகள் நடந்துள்ளன. கேரளத்தில் அனுசரித்ததைப்போன்ற அதே பாணியில்தான் இவை உள்ளன.

இந்தப் பாணிதான் என்ன? இது போன்ற சூழ்நிலையை உருவாக்கியது. சட்டமும் அமைதியும் குலைந்துவிட்டதாக உள்துறை அமைச்சரே பேசுவது! மந்திரிகளைப் பற்றி கவலைப்படாதீர்கள். உங்களைப் பாதுகாக்க நாங்கள் இருக்கிறேன். உங்கள் விருப்பம்போல் செய்யுங்கள்'' என்று அதிகாரிகளைத் தூண்டிவிடுவது. கவர்னர் டெல்லிக்கு வந்துவிட்டு திரும்பும்போது ''உங்களுக்கு எழுத்து மூலமான உத்தரவுகள் கிடைக்காவிட்டால்'' (அமுல் நடத்த வேண்டாம்என்றார்.)

இது மறுக்கப்பட்டது என்பதை நான் அறிவேன். பின் எதற்காக கவர்னர் போலீஸ் அதிகாரிகளை கூட்டுகிறார்? இது போல எந்த மாநிலத்திலாவது செய்யப்பட்டிருக்கிறதா? உறுப்பினர்கள் : வெட்கம்! வெட்கம்!

சவான் : பொதுவாக இது நம்முடைய வழக்கம். இதே போல விவாதிப்பதற்காக ஜனாதிபதி கவர்னர்களை கூட்டுவதில்லையா?

உமாநாத் : இது சம்பந்தமாக கவர்னரே பத்திரிகை நிருபர்களிடம் சொல்லியுள்ளாரே.

சவான் :

கவர்னர் மீது கூறப்பட்டதை அவர் அவ்வாறு மறுத்துள்ளார். உண்மை என்னவென்றால் மேற்கு வங்கத்தின் முதலமைச்சர் ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகளையும் ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டுகளையும் சில பிரச்சினைகள் பற்றி விவாதிப்பதற்காக கல்கத்தாவுக்கு அழைத்தார். இந்த சந்தர்ப்பத்தை போலீஸ் அதிகாரிகளை சந்திப்பதற்காக கவர்னர் பயன்படுத்திக் கொண்டார். இவ்வாறு செய்தது மேற்கு வங்க முதலமைச்சருக்கு தெரியும். ஆனால் இங்கு கூறப்பட்டதுபோல எதுவும் நடக்கவில்லை.

(குறுக்கீடுகள்.)

ராமமூர்த்தி : இந்தப் பிரச்சினை மேற்கு வங்க சட்டசபையில் விவாதிக்கப்பட்டது. அதை திரு சவான் அறியவில்லை என நினைக்கிறேன்.

**தைரியமுண்டா?**

கடைசியாக நான் சொல்ல விரும்புவது இதுதான், ஒவ்வொரு முறையும் சட்டம் ஒழுங்கு என்ற பிரச்சினையை சபையின்கவனத்திற்குகொண்டுவரும் முறையே அவர்களது வழக்கமான பாணியைக் காட்டுகிறது. தைரியமிருப்பின் அந்தஅரசை வீழ்த்துங்கள். அதற்கான ஆதாரங்கள் எதுவும் கிடையாது என்பது எனக்குத்தெரியும். அதற்கான அரசியல் தயாரிப்புக்காகவும், அதிகாரிகள் மத்தியில் பாதுகாப்பற்ற தன்மை உள்ளது என்ற உணர்வை உண்டாக்குவதற்காகவும் இதையெல்லாம் செய்கிறீர்கள். கவலைப்படாதீர்கள். அங்கு இந்த அரசாங்கம் நிலைக்க அனுமதிக்கமாட்டோம்'' என்றெல்லாம் அதிகாரிகளுக்கு சொல்கிறீர்கள். புதிய ஆட்சி அங்கு சாதாரண மக்களைத் தாக்குவதில்லை என்ற புதிய கொள்கையை அனுசரிக்கிறது. இக்கொள்கை வெற்றியடைவது உங்களுக்குப்பிடிக்கவில்லை. அதற்காகத்தான் அரசாங்கம் இத்தனையையும் செய்கிறது. ஆனால் நீங்கள் வெற்றியடையப் போவதில்லை.

**தேர்தலுக்கும் தயார்?**

கனம் உறுப்பினர் சட்டர்ஜி அவர்கள் பிரமோத்தாஸ் குப்தா இடைத் தேர்தல்கள் குறித்துப் பேசியதை குறிப்பிட்டார். நாங்கள் எந்த மக்களுக்கு தொண்டாற்றினோமோ அந்த மக்களின் தீர்ப்பை நாங்கள் ஏற்கத் தயார் என்றார். ஹௌராவிலும் பிற இடங்களில் நடந்த நகராட்சித் தேர்தல்களில் கூட காங்கிரஸ் தோல்வியுற்றது. நக்சல் பாரி விஷயத்திலும் நாங்கள் செய்தது சரியா? காங்கிரசார் செய்தது சரியா? என்பதை வைத்து நாங்கள் வாக்காளர்களை சந்திக்க தயாராக உள்ளோம்.

**பக்தவத்சலம் எங்கே!**

கடந்த 20 ஆண்டுகளாக காங்கிரஸ் கையாண்ட கொள்கைகள் இந்த நாட்டில் பாதுகாப்பற்ற தன்மையை தோற்றுவித்துள்ளது. பூர்வ குடி மக்களுக்கும் ஒவ்வொரு மாநிலத்தவருக்கும் இன்று பாதுகாப்பில்லை. இந்த பாதுகாப்பற்ற தன்மைதான் சட்டம் ஒழுங்கு என்ற பிரச்சினைக்கு அடிப்படையாகும். வாழ்க்கையிலும் பொருளாதாரத் துறையிலும், சமூகத் துறையிலும் உள்ள பாதுகாப்பின்மையை போக்காமல் அதாவது அடிப்படைப் பிரச்சினையை தீர்க்காமல் வெறும் சட்டத்தையும் ஒழுங்கையும் பற்றிப் பேசுவது பழைய கொள்கையையே திரும்பவும் அனுசரிப்பதற்கான முயற்சிதான். கடந்த பொதுத் தேர்தலில் அவர்களுக்கு சரியான பாடத்தை போதித்தது. தமிழ் நாட்டில் பக்தவத்சலம் சட்டத்தையும் ஒழுங்கையும் முறையாக அமுலாக்குவதாக மத்திய மந்திரிகள்புகழ்ந்தார்கள்! இப்போது பக்தவத்சலம் எங்கே இருக்கிறார் என்பதும் நமக்குத் தெரியும். சட்டம் ஒழுங்கு என்ற பேச்சுகளுக்கு தமிழக மக்களும், அவரது தொகுதி மக்களும் சரியான பதிலை அளித்தனர். இதே பாதையில் நீங்கள் தொடர்ந்து செல்ல முடியாது என எச்சரிக்கிறேன் இறுதியாக மக்களுக்கு சரியான சந்தர்ப்பம் கிடைக்கும் போது காங்கிரஸ் கட்சியும் ஆட்சியும் மக்களிடத்தில் பதிலளித்தே ஆகவேண்டும். அவர்களும் சரியான பதிலளிக்கத் தான் போகிறார்கள்.

## அமெரிக்கத் தூதரகம் முன் ஆர்ப்பாட்டம்!

20—7—67 அன்று வியட்நாம் தினத்தை முன்னிட்டு சென்னையில் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பிலும் தொழிற்சங்கங்களின் சார்பிலும் அமெரிக்க தூதரகம் முன் மாபெரும் ஆர்பாட்டம் நடைபெற்றது. நேப்பியர் பூங்காவிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது. அமெரிக்க தூதரகம் முன் கொளுத்துவதற்காக ஊர்வலத்தில் எடுத்துச் செல்லப்பட்ட ஜான்சனின் கொடும்பாவியை போலீஸார் பறிமுதல் செய்து போலீஸ் லாரியில் கொண்டு சென்றனர். இதைக் கண்ட பொது மக்களும் தொழிலாளர்களும் ஜான்சன் போலீசாரால்கைது செய்யப்பட்டான் வெட்கம் வெட்கம் என்று கோஷித்தனர். வியட்நாம் போராடடத்தை ஆதரித்து உணர்ச்சி ததும்ப கோஷம் எழுப்பிக்கொண்டு சென்ற ஊர்வலம் அமெரிக்க தூதரகம் முன் ஆர்பாட்டம் செய்த பின் ராயப்பேட்டையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் முடிவடைந்தது. போலீசாரின் நடவடிக்கையில் ஆத்திரமடைந்த தொழிலாளர்கள் ஜான்சனின் படத்தை பொதுக்கூட்டத்தில் கொளுத்தினர்.

பொதுக்கூட்டத்திற்கு சென்னை மாவட்ட செயலாளர் தோழர் கே. கஜபதி தலைமை வகித்தார். தோழர் கே. அனந்தன் நம்பியார் வியட்நாம் போராட்டத்தை விளக்கி இந்திய சர்க்கார் அனுஷடிக்கும் கொள்கையைக் கண்டனம் செய்து பேசினார்.

## இன்ஷூரன்ஸ் ஊழியர்கள் வேலை நிறுத்தம்

ஜூலை 25-ம் நாளன்று தமிழகமெங்கும் மின் இயந்திர மூளையைத் திணிப்பதை எதிர்த்து நடைபெற்ற ஒரு நாள் வேலை நிறுத்தப் போராட்டம் வெற்றிகரமாக நடந்தேறியது.

அதைப்போலவே கேரள மாநிலத்திலும் வேலைநிறுத்தப் போராட்டம் வெற்றி முரசு கொட்டியது.

டைம்ஸ்பிரஸ் (153, டாக்டர் நடேசன் ரோடு சென்னை-5)ல் வெளியிடுபவர் ஆசிரியர் : கே. முத்தையா